# மக்கள் நேயச் சுயமரியாதை



முனைவர் பொன். கோதண்டராமன்
(பொற்கோ)

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# மக்கள் நேயச் சுயமரியாதை

முனைவர் பொன். கோதண்டராமன்
(பொற்கோ)

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
இரண்டாவது முதன்மைச் சாலை
மையப் பல்தொழில் நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

தந்தை பெரியார் ஈ.வெ.ரா. அறக்கட்டளைச் சொற்பொழிவு
அறக்கட்டளை நிறுவியோர் : முனைவர் ந. வேலுசாமி
மேனாள் பதிவாளர், பெரியார் பல்கலைக்கழகம், சேலம்
வரிசை எண் : 2 நாள்: 23-11-05

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Makkal Neya Suyamariyāthai** |
| Author | : | Dr. Pon. Kothandaraman ( Portko ) |
| General Editor | : | Dr. M. Valarmathi<br>Research Assistant<br>International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Chennai 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113.<br>Telephone : 22542992 |
| Publication No | : | 553 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 2005 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | x + 94 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.30/- (Rupees Thirty only) |
| Printing | : | Venkateswara Offset Press<br>Aziz Mulk Street, Chennai - 6 |
| Subject | : | Socio - Political Philosophy |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# அணிந்துரை

காலத்திற்கும் சூழலுக்கும் ஏற்றவாறு தத்துவங்கள் தோன்றுகின்றன. 1925-ஆம் ஆண்டுக் காலக்கட்டத்தில் தமிழகத்தில் நிலவிய சமுதாயச் சூழல், பெரியாரியல் தத்துவம் தோன்றக் காரணமாக இருந்தது. பெரியாரால் உருவாக்கப்பட்ட சுயமரியாதைத் தத்துவம் தமிழ் மக்கள் வாழ்வியலில் தொடர்ந்து பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி வருகிறது. இந்தத் தத்துவம் செயல்படுவதற்கும் தொடர்ந்து செயல்படுத்துவதற்குமான ஒரு களமாக சுயமரியாதை இயக்கம் விளங்கியது.

"சுயமரியாதை இயக்கமானது அரசியல்களின் பேரால் நமது நாட்டிலுள்ள பல கட்சிகளைப் போலல்லாமல், அன்னியர்களிடம் இருந்து யாதொரு விதமான சிறு விஷயத்தையும் எதிர்பாராமல், மக்களின் அறிவை விளக்கி அவரவர்களின் மனப்பான்மையை மாற்றுவதன் மூலமே உண்மையான விடுதலையையும், சமத்துவத்தையும், தன்மதிப்பையும் உண்டாக்கக் கூடியதுமான ஒரு இயக்கமாகும்.

இவ்வியக்கத்தின் முக்கியக் கொள்கை எல்லாம், கட்டுப்பட்டு அடைக்கப்பட்டிருக்கும் அறிவுக்கு விடுதலையை உண்டாக்குவதேயாகும். ஆதலால், சுயமரியாதை இயக்கம் என்பதை அறிவு விடுதலை இயக்கம் என்றே சொல்லலாம். இதன் உண்மை விளங்க வேண்டுமானால் ஒரு நேர்மையான மனிதன் தனது அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் உள்ள கட்டுப்பாட்டையும் நிர்பந்தத்தையும் பற்றி நாம் நினைத்துப்பார்ப்போமானால் இவ்வியக்கத்தின் பெருமை தானாக விளங்கும்."

என 1929-ஆம் ஆண்டில் தந்தை பெரியார் குடியரசு ஏட்டில் எழுதிய தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளார் (பெரியார் ஈ.வெரா. சிந்தனைகள், வே. ஆனைமுத்து, ப.481-482).

வருணாசிரம தர்ம ஒழிப்பு, பகுத்தறிவு, சமதர்மம் ஆகிய மூன்று மாபெரும் அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டு, இவற்றிற்குத்தடையாக உள்ள அனைத்தையும் ஒழித்துத் தமிழ்ச் சமுதாயம் அறிவு விடுதலை பெற்ற சமுதாயமாக உருவாக வேண்டும் என்பதே சுயமரியாதை இயக்கத்தின் இறுதி இலட்சியமாகும்.

சுயமரியாதைத் தத்துவத்தின் மையக்கரு தன்மானம்தான். பெரியார் நடத்திய போராட்டங்கள் அனைத்தும் அடிப்படையில் ஏதாவது ஓர் அடிமைத்தனத்தை, இழிவை எதிர்த்து நடத்திய போராட்டங்களே ஆகும். அவர் எதைப்பற்றிப் பேசினாலும் எழுதினாலும் அது மனித இழிவை ஒழிப்பதாகவும், மனிதப் பண்பாட்டை மரியாதைக்குரியதாக்கவும், மனித நேயத்தை வளர்ப்பதாகவும் அமையும். அவரைப் பொறுத்தமட்டில் மானமே உரிமை; மானமே பிறப்புரிமை.

''மனித ஜீவனுக்கு எல்லாவற்றையும்விட முக்கியமான உணர்ச்சியாக, மான அவமானம் என்னும் தன்மானமாகிய சுயமரியாதையைத் தான் பிறப்புரிமையாகக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஏனெனில் 'மனிதன்', 'மானிடன்' என்ற பதங்களே மானத்தை அடிப்படையாகக் கொண்டு ஏற்பட்ட மொழிகள். ஆதலின், மனிதன் என்பவன் மானமுடையோன்; எனவே மனிதனுக்கு மனிதத் தன்மையை காட்டும் உரிமையுடையது மானம்தான். அத்தன்மையாகிய சுயமரியாதையைத்தான் மனிதன் சுயமரியாதையாகக் கொண்டிருக்கின்றான்''

என்று 1927 - ஆம் ஆண்டில் குடியரசு இதழில் தந்தை பெரியார் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

இத்தகைய எழுச்சி மிக்க ஆற்றல் மிக்க சிந்தனைகளுக்குத் தமிழர்களைச் சொந்தக்காரர்களாக ஆக்கினார் பெரியார். அச் சிந்தனைகளைத் தொடர்ந்து இளம் தலைமுறையினர் வாழ்வில் பின்பற்றும் வகையில் அதற்கான செயல் முறைகள் தொடர்ந்து நடைபெறுதல் வேண்டும். தற்காலத்தில் பெரியாரியல் தத்துவம் குறித்துப் பல பல்கலைக்கழகங்களில் பல்வேறு கோணங்களில் ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. இதற்குத் துணை செய்யும் வகையில் பெரியார் பல்கலைக்கழகத்தின் முன்னாள் பதிவாளர் முனைவர் ந. வேலுசாமி அவர்கள் தந்தை பெரியார் பெயரில் ஓர் அறக்கட்டளையை நிறுவினார். இதனைத் தொடர்ந்து திராவிடர் கழகத் தலைவர் மானமிகு கி. வீரமணி

அவர்கள் மகளிர் அணி சார்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நாகம்மையார் அறக்கட்டளை, மணியம்மையார் அறக்கட்டளை ஆகிய இரண்டு அறக்கட்டளைகளை நிறுவினார். தந்தை பெரியார் அறக்கட்டளையின் முதல் சொற்பொழிவை மானமிகு கி. வீரமணி அவர்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 'பெரியாரின் பண்பாட்டுப் புரட்சி' என்னும் தலைப்பில் சொற்பொழிவு நிகழ்த்தி அந்நூல் அன்றே வெளியிடப்பட்டது. தந்தை பெரியார் அறக்கட்டளையின் இரண்டாவது சொற்பொழிவு சென்னைப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் பொற்கோ அவர்களால் 'மக்கள் நேயச் சுயமரியாதை' என்னும் தலைப்பில் நிகழ்த்தப்பட்டு இந்நூல் வெளியிடப்படுகிறது.

இந்நூலில் பெரியாரின் சுயமரியாதைத் தத்துவத்தை இன்றைய இளம் தலைமுறையினர் நன்றாக எளிமையாகப் புரிந்து கொள்ளும் வகையில் முனைவர் பொற்கோ அவர்கள் வழங்கியுள்ளது பெரும் பாராட்டுக்குரிய செயலாகும். பண்டைத் தமிழர் வாழ்வில் சுயமரியாதை உணர்வுகள் எவ்வாறு வெளிப்பட்டு நின்றன என்பதைத் தமிழ் இலக்கியச் சான்றுகள் மூலம் எடுத்துக்காட்டியுள்ளார். பிராமணியத் தாக்கத்தால் தமிழர் பண்பாடு சிதைவுற்று அடிமைச் சிந்தனை இடம் பெற்றது என்பதையும் அதிலிருந்து விடுதலை பெறப் பெரியார் தமது வாழ்நாள் முழுவதும் எத்தகைய போர்க் குணத்துடன் அயராது பாடுபாட்டுள்ளார் என்பதையும் இந்நூலில் முனைவர் பொற்கோ அவர்கள் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார். சுயமரியாதைத் தத்துவத்தினால் குழந்தைமண ஒழிப்பு, தேவதாசி முறை ஒழிப்பு, சாதி அழிப்பு மணம், விதவை மணம், மறு மணம், சுயமரியாதைத் திருமணம் எனப் பல்வேறு நிலைகளில் திருமண முறைகளில் மாற்றங்கள் ஏற்பட்டன. தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட மக்கள் உரிமை பெற்ற மக்களாக வாழ்வு பெற வழி அமைத்தது. பெண்ணடிமைத் தனம் என்பதை முழுமையாக அதன் வேரிலிருந்து களைந்து பெண் சமுதாயம் விடுதலை பெறுவதற்கான சூழலை உருவாக்கியுள்ளது. இவ்வாறு அடிமை நிலையில் ஆழ்ந்து கிடந்த தமிழ்ச் சமூகத்தைத் தூக்கி நிறுத்த சுயமரியாதைத் தத்துவம் அடிப்படையாக அமைந்தது என்பதை முனைவர் பொற்கோ அவர்கள் இந்நூலில் மிகச் சிறப்பாக விளக்கியுள்ளார். அவருடைய இம்முயற்சியைப் பெரிதும் போற்றிப் பாராட்டி வரவேற்கிறேன்.

இவ் அறக்கட்டளைச் சொற்பொழிவு நடைபெறவும், நூல் வெளிவரவும் கடமையுணர்வுடன் செயல்பட்ட அறக்கட்டளைப்

பொறுப்பாளர் முனைவர் மு. வளர்மதிக்குப் பாராட்டுக்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் முனைவர் பு.ஏ. இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன், இ.ஆ.ப., அவர்களுக்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டுத்தந்த சென்னை வெங்கடேஸ்வரா அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
08-11-2005

இயக்குநர்

# ஆசிரியரைப் பற்றி



இல்லோர் புரவலராய் எளியோர் செம்மலாய் வாழ்ந்து மறைந்த புலிசைவாணர் பொன்னுசாமி, அருள்விளக்க அம்மையார் திருமதி பழனியம்மாள் ஆகியோர்க்கு அருமை மகனாய்ப் பழைய திருச்சிராப்பள்ளி மாவட்டம் உடையார்பாளையம் வட்டம் இரும்புலிக்குறிச்சி என்னும் சிற்றூரில் விருந்தோம்பி வேளாண்மை செய்யும் உழவர் குடியில் 9-6-1941 இல் பிறந்தவர் இவர்.

தாம் பயின்ற பள்ளியளவிலும் மாவட்ட அளவிலும் பல்வேறு போட்டிகளில் பரிசுகள் பெற்றவர். பள்ளி இறுதி வகுப்பில் பள்ளியிலேயே முதல் மதிப்பெண் பெற்றுத் தேர்ச்சி பெற்றவர். பள்ளி இறுதி வகுப்பிற்குப் பிறகு பொது நிலையில் தகுதி வழியில் மைய அரசின் மூலம் தகுதிசார் கல்வி உதவித் தொகை பெற்றவர்.

திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியிலும் பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் பயின்றவர். ஆராய்ச்சி மாணவர் நிலையில் ஆய்வுக் கட்டுரைகளை ஆய்வரங்கில் வழங்கி நமது நாட்டில் பேராசிரியர்களின் பாராட்டுகளைப் பெற்றதோடு முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பே அமெரிக்க நாட்டுப் பேராசிரியர் எம் Oபி எமெனோ போன்ற அறிஞர்களின் பாராட்டைப் பெற்றவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலேயே சில காலம் பணியாற்றியவர்.

முப்பது ஆண்டுகளுக்கு முன்பே இலண்டன் பல்கலைக்கழகத்தில் உள்ள கீழைக் கலையியல் ஆப்பிரிக்கவியல் நிறுவனத்தில் பணி நியமனம் பெற்று இரண்டாண்டுகள் பணியாற்றியவர். இலண்டன் தமிழ்ச் சங்கத்தின் தலைவராக இருந்தவர். 1972 முதல் அதன் புரவலராகச் சிறப்பிக்கப்பட்டவர்.

இங்கிலாந்தில் இலண்டனில் இருந்தபோது ராயல் ஆசியக் கழகத்தால் ஆய்வுச் செம்மலாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றவர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சில ஆண்டுகள் பணியாற்றியவர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் இந்திய அரசும் செய்த ஏற்பாட்டின்படி யுனெஸ்கோ ஆய்வுச் செம்மலாக அமெரிக்கப் பல்கலைக்கழகங்களில்

நிகழும் மொழி இலக்கிய உயர்நிலை ஆய்வுகளைப் பயன்பாட்டு நோக்கில் நேரடியாகக் கண்டறிந்தவர்.

ஜப்பானில் டோக்கியோ நகரத்தில் உள்ள காக்சுயின் பல்கலைக்கழக அழைப்பின் பேரில் தமிழ் - ஜப்பானிய ஆய்வு தொடர்பாக மூன்று முறை அங்கே சென்று விருந்துநிலைப் பேராசிரியராகக் கடமை யாற்றியவர். சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழிலக்கியத் துறைத் தலைவராகவும் கீழைக் கலையியல் ஆய்வு நிறுவன இயக்குநராகவும் இருந்து திட்டமிட்டுச் சிறப்பாகக் கடமை யாற்றியவர். 1999 முதல் 2002 வரை சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்து அய்ந்து நட்சத்திர மதிப்பு நிலை, உயர்தகவுப் பல்கலைக்கழகம் என்ற தனிப் பெரும் பேறு முதலான பல்வேறு சிறப்புகளைப் பல்கலைக்கழகத்திற்குச் சேர்த்தவர்.

பல நாடுகளுக்குச் சென்று வந்தவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்களையும் கட்டுரைகளையும் எழுதியவர். ஆராய்ச்சி இதழ்கள் சிலவற்றுக்கு ஆசிரியராகவும் மக்கள் இதழ்கள் சிலவற்றுக்குச் சிறப்பாசிரியராகவும் இருந்தவர். கல்வி உலகம் ஆய்வுலகம் என்பதோடு நின்றுவிடாமல் எப்போதும் வெளி உலகில் மக்களோடு இணைந்து மக்கள் மேம்பாட்டுப் பணிகளில் மகிழ்ச்சியோடு தன்னை இணைத்துக் கொள்பவர்.

# பொருளடக்கம்

# தொடங்குகிறேன். வணக்கம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கள் 'பெரியார் அறக்கட்டளைச் சொற்பொழிவுத் திட்டத்தின் கீழ் நீங்கள் வந்து உரையாற்ற வேண்டும் என்று இந்த நிறுவனம் விரும்புகிறது. நீங்கள் வரவேண்டும்,' என்று ஒரு அழைப்பு விடுத்தார். மகிழச்சியோடு அந்த அழைப்பை ஏற்றுக் கொள்வதாகத் தெரிவித்தேன். சொற்பொழிவுக்கு ஒரு தலைப்பைத் தருமாறு கேட்டபொழுது என் மனத்தில் ஓங்கி உயர்ந்து நின்ற தலைப்பு 'சுயமரியாதை' என்பதுதான். கடந்த ஒரு நூற்றாண்டுக் கால வரலாற்றுச் சாதனைகளுக்கு இந்தச் சுயமரியாதைதான் உந்துவிசையாக இருந்திருக்கிறது.

இன்று நமக்கு மிகவும் தேவையானதாக இருப்பதும் சுயமரியாதைதான். மனிதனை மனிதனாக்கவும் மனித நேயத்தை வளர்க்கவும் மனித உறவை மேம்படுத்தவும் சுயமரியாதை உணர்ச்சிக்கு நிகராக வேறு எதுவும் உதவ முடியும் என்று தோன்றவில்லை. சுயமரியாதை வெளிச்சத்தில் இளைய தலைமுறையினர் உலகத்தைப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்க நாம் அவர்களுக்கு உரிய முறையில் உதவ வேண்டும். உலகத்தை அவர்கள் அப்படிப் பார்க்கும் போதுதான் அவர்கள் வலிமை அவர்களுக்குத் தெரியும். ஆகவே சுயமரியாதை பற்றிப் பேசுவது பொருத்தம் என்று முடிவு செய்து 'மக்கள் நேயச் சுயமரியாதை' என்று ஒரு தலைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். அந்தத் தலைப்பில் பேசத் தொடங்குகிறேன்.

# 1. முன்னுரை

சுயமரியாதை என்ற சொல் இன்று எல்லோருக்கும் நன்கு அறிமுகமான சொல். இந்தச் சொல்லைச் சுயமரியாதை இயக்கத் தந்தை பெரியார் பயன்படுத்தத் தொடங்கிய காலத்தில் இது நல்ல தமிழ்ச் சொல்லாக இல்லையே என்று சிலர் இதைப் பயன்படுத்துவதில் தயக்கம் காட்டினர். இதற்கு மாற்றாக அவர்கள் தன்மானம், தன்மதிப்பு ஆகிய சொற்களை முன்வைத்தனர். பெரியார் இந்தக் கருத்துரையை ஏற்கவில்லை. அவர் என்ன சொல்லுகிறார் பாருங்கள்:

*"இந்த உலகத்தில் உள்ள எல்லா அகராதிகளையும் கொண்டு வந்து போட்டு, ஏடு ஏடாய்ப் புரட்டிப் பார்த்தாலும் அழகும் பொருளும் சக்தியும் நிறைந்த வார்த்தையாகிய 'சுயமரியாதை' என்கிற வார்த்தைக்கு மேலானதாகவோ ஈடானதாகவோ உள்ள வேறு ஒரு வார்த்தையை யாராலும் கண்டுபிடிக்க முடியாது. இந்த வார்த்தையானது, நமது நண்பர்களிலேயே (சிலர்) 'கொள்கைகளெல்லாம் நமக்குப் பிடிக்கின்றன: ஆனால் சுயமரியாதை என்ற சொல் மாத்திரம் பிடிக்கவில்லை' என்று சொல்லும் மேதாவிகளுக்குத் தக்க பதிலாகும்".*

இப்படி மிகவும் சூடாகப் பதிலளிக்கிறார். (பெரியார் ஈ.வெ.ரா சிந்தனைகள், தொகுதி 1, பக்கம் 485). இந்தச் சுயமரியாதை என்ற சொல் எல்லோருக்கும் நன்றாக, எளிதாக விளங்குகிறது. சுயமரியாதை இயக்கம் என்பதனைச் சு ம இயக்கம் என்று சுருக்கிச் சொல்லுவார்கள். சுயமரியாதைக் காரர்களைப் பிடிக்காதவர்கள் சூனா மானா காரன் என்பார்கள். இந்த இயக்கத்தின் மீது வெறுப்பு கொண்டவர்கள் சு ம இயக்கம் என்பதற்கு 'சுத்த மடப்பசங்க இயக்கம்' என்று கூட ஒரு விரிப்புக் கொடுத்தார்கள்.

இந்த வாய்ப்பில் உங்களுக்கு ஒரு சுவையான செய்தியைச் சொல்ல வேண்டும். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியில் இந்தச் 'சுயமரியாதை' என்ற சொல் இல்லை. சுயகாரியப் புலி, சுயநலம், சுயபுத்தி முதலான சொற்களெல்லாம் இடம்பெற்றுள்ளன. சுயமரியாதையை

மட்டும் காண முடியவில்லை. இந்தச் சுயமரியாதை இறுதியாக வெளிவந்த இணைப்புத் தொகுதியிலும் இடம்பெறவில்லை. சுயமரியாதை இயக்கம் 26-12-1926-லேயே தெளிவாகவும் உறுதியாகவும் வடிவம் பெற்று விட்டது. 1939-ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில்தான் தமிழ்ப் பேரகராதியின் இணைப்புத் தொகுதிப் பணி நிறைவு பெற்றது. அனுபந்தம் என்ற பெயரில் இந்தத் தொகுதி வெளிவந்திருக்கிறது.

தன்மானம் என்ற சொல் கூடத் தமிழ்ப் பேரகராதியில் இடம்பெறவில்லை. பேரகராதிப் பணி போற்றிப் பாராட்டத் தக்க அரும்பணி, பெரும்பணி என்பதில் மாற்றுக் கருத்துக்கு இடமிருக்க முடியாது. இந்தப் பணி நடந்த காலத்தில் சுயமரியாதையும் தன்மானமும் அறிஞர்கள் நடுவில் புறக்கணிப்புக்கு உள்ளாகியிருக்கிறது என்று கருதுவது மட்டும் எந்த வகையிலும் தவறாகாது. இந்தச் சொல்லே அந்தக் காலத்தில் வழக்கில் இல்லையோ என்னவோ என்று அமைதி காண நினைப்பது சரியாகாது.

பெரியார் பேசிய சுயமரியாதை ஒரு குறிப்பிட்ட மனிதனுக்கோ ஒரு குறிப்பிட்ட கூட்டத்துக்கோ உரிய சுயமரியாதை அல்ல, மனித சமுதாயத்துக்கே உரிய சுயமரியாதை.

"சுயமரியாதை உணர்ச்சி ஒவ்வொரு மனிதனுக்கும் தோன்றி விட்டால் இன்று சமுதாயத்தில் காணும் பல கேடுகள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய்விடும். சமுதாயத்தில் காணும் ஏற்றத் தாழ்வுகளையும் மானமற்ற தன்மையையும் கண்டு அதைப் பற்றி ஆழமாகச் சிந்தித்து ஆராய்ந்து பார்த்து, உண்மையான சுயமரியாதை உணர்ச்சி மக்களுக்குத் தோன்றிவிட்டால் அதுவே அரசியலையும் தேசியத்தையும் மற்ற மத இயலையும் தானாகவே சரிப்படுத்திக் கொள்ளும்"

என்று பெரியார் திட்டவட்டமாகத் தெளிவு படுத்திக் கூறுகிறார் (ஈ. வெ. ரா சிந்தனைகள், தொகுதி 1, பக்கம் 478). அவர் பேசுவதெல்லாம் மக்கள் சுயமரியாதை. சுயமரியாதை உணர்ச்சி என்பது மக்களாகப் பிறந்த எல்லோருக்கும் உயிரைவிட மேலானது என்றே பெரியார் கருதுகிறார். சுயமரியாதை உணர்ச்சி இல்லாத மனிதன் ஊனப்பட்டவன்; குறைப் பிறவி. சுயமரியாதை உணர்ச்சி என்பது எல்லோருக்கும் பொது; எல்லோருக்கும் உரியது; எல்லோருக்கும் தேவையானது. இதனால்தான் பெரியார் அவர்கள் திறந்த மனத்தோடு,

1 சுயமரியாதை இயக்கம் கட்சி பேதமற்றது என்கிறார்.

2 சுயமரியாதை இயக்க உறுப்பினர் திராவிடர் கழக உறுப்பினராக இருக்க வேண்டுமென்று கட்டாயமில்லை என்கிறார்.

3 சுயமரியாதை இயக்கம் என்பது அரசியல் நாற்றமே இல்லாத ஒன்று என்கிறார்.

4 சர்க்கார் ஊழியர் உள்ளிட்ட எவரும் இதில் உறுப்பினராகலாம் என்கிறார் (பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள் தொகுதி 1, பக்கம் 531).

இவற்றுக்கெல்லாம் மேலாக இன்னொன்றையும் இங்கே குறிப்பிட வேண்டும். சுயமரியாதை இயக்கத்தில் நாத்திகம் ஒரு கொள்கையாகக் குறிப்பிடப் பட வில்லை என்கிறார் (பெரியார் ஈ. வெ. ரா சிந்தனைகள், தொகுதி 1, பக்கம் 457).

'சமயமும் சடங்கும் சம்பிரதாயமும் மனிதனை மானமற்ற நிலையில் வாழவும் இழிவைச் சகித்துக் கொள்ளவும் பழக்கப் படுத்தி விட்டன. அப்படி இல்லாமல் மதம்கூடப் 'பகுத்தறிவுக்கு ஒத்ததாகவும் கால தேச வர்த்தமானத்துக்கு ஏற்பத் திருத்திக் கொள்ளக் கூடியதாகவும் சகல மக்களுக்கும் பயன் ஒன்றுபோல் உண்டாகக் கூடியதாகவும் இருக்கத் தக்க கொள்கைகளைக் கொண்டது என்றால் அதை சுயமரியாதைக் காரர்கள் மறுப்பதற்கு முன்வர மாட்டார்கள்' என்று மிகத் தாராளமாகவே பெரியார் ஒரு விளக்கம் தருகிறார். (பகுத்தறிவு, கட்டுரை, மார்ச்சு, 1936, பெரியார் ஈ.வெ.ரா சிந்தனைகள், தொகுதி 1, பக்கம் 524). இந்த விளக்கம் மதவாதிகளிடமும் பெரியாருக்கு மிக நல்ல மரியாதையை ஏற்படுத்தித் தந்தது.

சுயமரியாதை இயக்கப் பணிகள் ஒரு குறிப்பிட்ட மனிதனையோ ஒரு குறிப்பிட்ட கும்பலையோ மையப்படுத்தியன அல்ல; அவை மனிதகுல மேம்பாட்டை மையப்படுத்தியவை. உலகில் ஒடுக்கப் பட்ட மக்கள் எங்கிருந்தாலும் சுயமரியாதை இயக்கக் கொள்கை அங்கெல்லாம் அவர்களுக்குப் பயன்படத் தக்கவை. "சுயமரியாதை இயக்கம் மனிதன் அறிவு பெறவும் சமத்துவம் அடையவும் சுதந்திரம் பெறவும் பாடுபடுகின்றது," என்று பெரியாரே இந்தக் கருத்தைத் தெளிவு படுத்துகிறார் (ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1, பக்கம் 490).

சமயம், சடங்கு, சம்பிரதாயம், பரம்பரை பரம்பரையாக இருந்துவரும் பழக்கவழக்கம் என்று இந்தப் பெயர்களால் தங்கள் மீது சுமத்தப்பட்ட இழிவுகளை வெகுமக்கள் முகஞ்சுளிக்காமல் ஏற்றுக்கொண்டிருப்பதைப் பார்த்துப் பெரியார் சற்றுக் கடுமையாகவே சொல்லுகிறார்;

*"மனிதனுக்கு வெட்கமும் ரோஷமும் ஏற்படுவதற்காகவே சுயமரியாதை இயக்கம் ஏற்பட்டது. சுயமரியாதை இயக்கம் மனித சமுதாயத்தையே மாற்றி அமைக்க ஏற்பட்டதாகும். இந்தக் காரியம் ஒரு சமூகப் புரட்சியில் ஏற்பட வேண்டியதே யொழிய சிரிப்பு விளையாட்டில் ஏற்படக் கூடியதில்லை" (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1, பக்கம் 456).*

இப்படியெல்லாம் சுயமரியாதையைப் பற்றி விளக்கி விளக்கித் திரும்பத் திரும்ப ஏன் பேசுகிறார்? அன்றைய சூழலில் மக்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சியே இல்லாமற் போனதா? முன்னர் எப்போதாவது தமிழகத்தில் உயிரோட்டமுள்ள சுயமரியாதை இந்த மக்களிடம் இருந்ததா? இருந்தது பின்னால் பறிபோய்விட்டதா? இவற்றைப் பற்றியும் நாம் இப்போது சிறிது சிந்திக்க வேண்டும்.

நாம் வாழும் காலத்திலேயே சுயமரியாதைக்குக் கேடான காரியங்கள் நடந்துவருகின்றன என்பது நமக்குத் தெரியும். குடும்ப நிகழ்ச்சிகளில் வைதிகச் சடங்குகளுக்கு உள்ள செல்வாக்கும் அவற்றில் புரோகிதர்களுக்கு உள்ள வழிவழி ஆதிக்கமும் நம் எல்லோருக்கும் தெரியும். வழிபாட்டில் சிதம்பரம் போன்ற புகழ் பெற்ற கோயில்களில் தமிழுக்குத் தரப்படுகின்ற இடம் எத்தகையது என்பதும் வடமொழிக்கு நிகரான இடம் தமிழுக்குத் தரப்பட வேண்டும் என்று போராடிய தமிழறிஞர்களுக்குக் கிடைத்த மரியாதை எத்தகையது என்பதும் தமிழ்ப் பெருமக்கள் எல்லோருக்கும் தெரியும். பொது உணவு விடுதிகளில் 'பிராமணர்கள் சாப்பிடும் இடம்' என்று பெயர்ப் பலகைகள் இருந்தன. அவற்றை அகற்றப் பெரியார் நடத்திய போராட்டம் நாடறிந்த செய்தி. நாற்பது அய்ம்பது ஆண்டுகளுக்கு முன்பு இருபது வயது கூட நிரம்பாத பார்ப்பனச் சிறுவர்கள் அறுபது வயதுக்கு மேற்பட்ட பார்ப்பனரல்லாதவரை மரியாதைக் குறைவாக விளித்துப் பேசுவது சிறு மன உறுத்தல் கூட இல்லாமல் ஏற்றுக் கொள்ளப் பட்டது அல்லது சகித்துக் கொள்ளப் பட்டது.

இந்த உயர்வு தாழ்வு மனப்பான்மை மற்ற சாதியாரிடமும் நோய்போலப் பரவியிருந்தது. இன்றும்கூட இந்த நிலைமை முற்றிலுமாக மாறிவிட்டது என்று சொல்ல முடியாது.

அப்படியானால் இவற்றின் மூலம் நாம் புரிந்து கொள்வது என்ன? அன்றாட வாழ்விலும் வாழ்வியல் சடங்குகளிலும் வழிபாட்டிலும் மனித உறவிலும் வெகுமக்களின் சுயமரியாதை உணர்ச்சி சாகடிக்கப் பட்டிருந்தது. அவமரியாதையும் இழிவும் வெகுமக்கள் மீது சுமத்தப் பட்டிருந்தது. வெகுமக்களும் அந்தச் சுமையை எதிர்ப்புக் காட்டாமல் தாங்கிக் கொண்டிருந்திருக்கிறார்கள்.

சுயமரியாதை உணர்ச்சியே இல்லாமல்தான் இந்த நிலையை வெகுமக்கள் இயல்பாக ஏற்று வாழ்ந்திருக்கிறார்கள். படிப்பறிவில்லாத மக்களிடந்தான் இந்த நிலை என்று நினைக்க முடியவில்லை. படித்தவர்கள் நிலை இன்னும் கேடாகக் கூட இருந்திருக்கிறது. பழங்காலத்தில் ஒரு புலவர் மன்னனைப் பார்த்துப் புகழ்ந்து பேசும் முறையில் "பார்ப்பனரைத் தவிர வேறு யார்க்கும் நீ பணிந்தறியாதவன்," என்கிறார் (பதிற்றுப் பத்து, கபிலர் செல்வக் கடுங்கோ வாழி யாதனைப் பாடியது). இதை அந்த மன்னன் ஒரு புகழ்ந்துரையாக ஏற்றுக் கொண்டிருக்கிறான். "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம் கீழோர்க் காகிய காலமும் உண்டே," என்கிறார் தொல்காப்பியர். இங்கே கீழோர் என்று குறிப்பிட்டது வேளாண் மாந்தரை. வேளாண் மாந்தருக்குத் திருமணம் மறுக்கப் பட்ட காலமும் இருந்திருக்கிறது என்று தெரிகிறது. பாட்டியல் நூல்கள் பாக்களிலேயே வருணபேதம் பார்த்திருக்கின்றன. "மேல் மூவரும் மனம் புகல வாய்மையான் வழியொழுகின்று," என்று கூறிப் புறப்பொருள் வெண்பா மாலை என்ற நூல் வேளாண் மாந்தரின் கடமையை வரையறுக்கிறது.

அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தென்பட்டாலும் வெகு மக்களை இழிவு படுத்துகிற போக்கு பழங்காலத்திலேயே தொடங்கி விட்டது என்பது மேற்காட்டிய இலக்கியப் பகுதிகளிலிருந்து புலனாகிறது. இந்த நிலை படிப்படியாக வளர்ந்து அரசியல் வழியாகவும் சமய வழியாகவும் தமிழகம் அடிமைப் பட்டு வீழ்ந்து கிடந்த போது சுயமரியாதை உணர்ச்சி இருக்குமிடம் தெரியாமல் ஒடுங்கிப்

போய் விட்டது. திருவள்ளுவரைப் போன்ற சில புலவர்களாலும் சிவ வாக்கியரைப் போன்ற சில சித்தர்களாலும் அத்திப் பாக்கம் வெங்கடாசல நாயக்கரைப் போன்ற சில மனிதநேய வாதிகளாலும் மருந்துச் செடி போலவும் விதை நெல் போலவும் இந்த உணர்ச்சி காலந்தோறும் காக்கப் பட்டு வந்திருக்கிறது.

வெகுமக்களை, பெரும்பான்மை மக்களை இழிவு படுத்தியது ஒருபுறம் இருக்கட்டும். கடந்த பல நூற்றாண்டுகளாக எல்லாச் சாதியினரும் பெண்மக்களைக் கீழான நிலையிலேயே வைத்து நடத்தியிருக்கிறார்கள். "தையல் சொல் கேளேல்," என்று ஒரு அம்மையாரே அறிவுறுத்துகிற அளவுக்குப் பெண்களின் நிலைமை கேடாக இருந்தது.

தமிழ்ச் சமுதாயம் எப்போதுமே இப்படித்தான் இருந்ததா? புலமையாளர்களின் ஏட்டிலக்கியங்கள், பழமொழிகள், நாட்டுப்புற மக்களின் வாய்மொழி இலக்கியங்கள் இவையெல்லாம் நமக்கு ஏதாவது புதிய வெளிச்சங்களைத் தரக் கூடுமா? அவற்றையும் நாம் சற்றே எண்ணிப் பார்ப்பது தகும்.

> *'மதியாத்தார் முற்றம் மதித்தொருகால் சென்று*
> *மிதியாமை கோடி யுறும்'*

என்று பாடிய புலவரும்

> *'ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே*
> *கெட்டான் எனப்படுதல் நன்று'*

என்று பாடிய புலவரும் இந்தச் சமுதாயத்தில் வாழ்ந்து மறைந்தவர்கள்தானே!

# 2. சுயமரியாதை உணர்ச்சி

## சுயமரியாதை இயக்க வேர்கள்

> 'எனக்குத் தகவன்றால் என்பதே நோக்கித்
> தனக்குக் கரியாவான் தானாய் தவற்றை
> நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனும் காணார்
> எனச்செய்யார் மாணா வினை' - பழமொழி 102

ஒவ்வொரு மனிதனுக்கும் தன் மீது தனக்கு உள்ள மரியாதையைத்தான் பொதுவாகச் சுயமரியாதை என்ற சொல்லால் குறிக்கிறோம். மான உணர்ச்சி இதனோடு மிக நெருக்கமானது. மானம் என்பது “எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும் தெய்வத்தான் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும்,” என்று பரிமேலழகர் மிக அழகாக ஒரு விளக்கம் தருகிறார். இந்த விளக்கத்துக்கு ஒரு சிறந்த இலக்கியமாகச் சேரமான் கணைக்கால் இரும்பொறை எதிரி அரசனின் சிறைச்சாலையில் உயிர் துறந்த நிகழ்ச்சி அமைந்து விட்டது. இதை நினைவூட்டுவது போல், “மானம் ஒன்றேநல் வாழ்வெனக் கொண்டு வாழ்ந்தஎன் மறவேந்தர்,” என்று பாவேந்தர் பாடுகிறார் ('இசை அமுது', முதல் பகுதி). இந்த மானமும் சுயமரியாதையும் நெருக்கமானவைதான். ஆனால், இவை இரண்டும் ஒன்றல்ல.

ஒரு பெண்ணின் மானத்தைக் காப்பாற்றுவதை அவளுடைய பிறந்த வீடும் புகுந்த வீடும் கடமையாகவும் பொறுப்பாகவும் கருதியிருக்கிறது; அவள் பிறந்த சமுதாயமேகூட அதைக் கடமையாகக் கொண்டிருக்கிறது. ஆனால் அந்தப் பெண்ணுக்கு அந்தக் குடும்பங்களோ சமுதாயமோ மரியாதை தந்ததாகச் சொல்ல முடியவில்லை. மரியாதையும் மானமும் நெருக்கமானவை. ஆனால் அவை இரண்டும் ஒன்றல்ல. மானம் என்பது நமக்கு நாமே காத்துக் கொள்ள வேண்டியது; மரியாதை என்பது பிறரிடமிருந்து நமக்குக் கிடைக்க வேண்டியது. பிறர் நமக்கு உரிய

மரியாதையை உரிய முறையில் உரிய நேரத்தில் தராமல் போனால் அல்லது தர மறுத்தால் அது நமக்கு அவமரியாதை அல்லது அது ஒருவகைப் புறக்கணிப்பு. நம் நாட்டில் வெகுமக்களுக்கு இழைக்கப் பட்ட அவமரியாதைகளும் புறக்கணிப்புகளும் பொருட்படுத்தப் படாமலே போயிருக்கின்றன.

அவமரியாதை செய்வதைவிட மிகக் கொடுமையானது அவமானப் படுத்துவது. சற்றுத் தெளிவாகச் சொன்னால், அவமானப் படுத்துவது என்பது திட்டமிட்டு முனைப்பாக மற்றவரைத் துன்புறுத்தும் நோக்கத்தோடு செய்யும் காரியம். அவமரியாதை என்பது அலட்சிய மனப்பான்மையோடு புறக்கணிக்கும் போக்கில் நடப்பது. அவமரியாதையைச் சில நேரங்களில் சகித்துக் கொள்ளுகிறோம், சில நேரங்களில் பொருட்படுத்தாமல் விட்டுவிடுகிறோம். ஆனால் அவமானம் நேரும்போது அப்படி விட்டுவிட முடியாது. அடிமையாக இருப்பவன்கூட அவமானத்தைத் தாங்க முடியாமல் கிளர்ந்து எழுகிறான்; அல்லது உயிரையே மாய்த்துக் கொள்ளுகிறான்.

ஒரு கூட்டத்துக்கே தொடர்ந்து அவமரியாதை இழைக்கப் படும்போது தொடர்ந்து அதைச் சகித்துக் கொண்டு வாழ்வது ஒரு வாழ்வா? அப்படி அவமரியாதையையும் இழிவையும் சமயத்தின் பேரால், சடங்கின் பேரால் மக்கள் மீது திணித்து அவர்களே அதை விரும்பி ஏற்கும்படி ஒரு மோசமான சமுதாயக் கட்டமைப்பு உருவாக்கப் பட்டு விட்டால் அந்தக் கட்டமைப்பு எவ்வளவு பழைமையானதாக இருந்தாலும் அதை உடைத்தெறிய வேண்டாமா?

மக்களை வருணமாகப் பிரித்து வருணத்தைச் சாதிகளாகப் பிரித்து இறுக்கமாக மேலென்றும் கீழென்றும் உயர்வு தாழ்வை நிலை நிறுத்திச் சம வாய்ப்புக்கோ சம உரிமைக்கோ இடமே இல்லாமல் உருவாக்கப் பட்டுள்ள இந்தக் கட்டமைப்பைப் பாதுகாப்பதில் யாருக்கு லாபம்? இந்தக் கட்டமைப்பு காக்கப் பட வேண்டுமா? அல்லது அழிக்கப் பட வேண்டுமா?

பெரியார் கருத்துப்படி இந்தக் கட்டமைப்பு அழிக்கப் பட வேண்டும். இதில் சீர்திருத்தம் செய்து பயனில்லை. கோவையில் 30-1-33-இல் பெரியார் பேசிய பேச்சின் ஒரு பகுதி இங்கே குறிப்பிடத் தக்கது.

"நமது இயக்கம் சீர்திருத்த இயக்கம் என்றும் பொதுநல இயக்கம் என்றும் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவைகளை நான் ஒப்புக்கொள்வதில்லை. நமது இயக்கம் சீர்திருத்த இயக்கமல்ல; ஆனால் அழிவு வேலை இயக்கம் என்றே சொல்லுவேன்" (ஈ.வெ.ரா.சிந்தனைகள், தொகுதி 1, பக்கம் 509).

காலந்தோறும் சமய வாழ்விலும் சமுதாய வாழ்விலும் பல பெரியவர்களும் அறிஞர்களும் சீர்திருத்தம் செய்ய முயன்றிருக்கிறார்கள். சென்னையை ஒட்டிய பகுதியில் அத்திப்பாக்கம் அ. வேங்கடாசல நாயகர் என்று ஒருவர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தார். இவர் ஒரு நூற்றாண்டுக் காலம் வாழ்ந்தார். இவர் சமய சாத்திரங்களின் பேராலும் இதிகாச புராணங்களின் பேராலும் இங்கு நிலவிய மூட நம்பிக்கைகளையும் பகுத்தறிவுக்கு ஒவ்வாத மூடச் சடங்குகளையும் கடுமையாகக் கண்டனம் செய்தவர். தமது கொள்கைகளையெல்லாம் செய்யுள் வடிவில் 'இந்து மத ஆசார ஆபாச தரிசினி' என்ற பெயரில் ஒரு நூலை உருவாக்கி 1883'லேயே அச்சிட்டு வெளியிட்டார். இந்த நூல் செம்மையான யாப்பு வடிவில் வெளிவந்த முதல் பகுத்தறிவு நூல் என்று சொல்ல வேண்டும். இவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை வாய்ந்தவர்; ஆசிரியராகப் பணியாற்றியவர். செல்வாக்குப் பெற்ற பெரியமனிதர்கள் எளிய மக்களை ஏமாற்றி அபகரித்த நிலபுலங்களையும் வீடுவாசல்களையும் ஆண்டுக் கணக்கில் சோர்வடையாமல் போராடி மீட்டெடுத்து மீண்டும் அவற்றை அவற்றுக்கு உரிய எளிய மக்களிடமே ஒப்படைத்தவர். "இவரைத் தமிழகத்தின் முதலாவது சமய, சமூக சீர்திருத்தக்காரராக நாம் கொள்ளலாம்," என்று அறிஞர் ஆனைமுத்து அவர்கள் கூறுவது இங்கே மகிழ்ச்சியோடு பதிவு செய்யத் தக்கது.

பெரியார் அவர்கள் சில பக்கங்கள் சிதைந்த நிலையில் மேற்குறித்த நூலைப் பார்த்துவிட்டு அந்த நூல் தமக்குத் தேவை என்று ஒரு அறிக்கை விடும்போது "ஓர் வேண்டுகோள்: 50 வருடத்துக்கு முன் சுயமரியாதை இயக்கம்," என்று வாசிப்பாளர் கவனத்தை ஈர்க்கும்படியாகத் தலைப்பு கொடுக்கிறார். அந்த நூலைப் பற்றிக் குறிப்பிடும்போது "நமது இயக்கக் கொள்கைகளையே முக்கியமாக வைத்துப் பாடின பாட்டுகள் அனேகம் அதில் இருக்கின்றன," என்கிறார்.

19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பண்டித மார்க்கசகாய ஆச்சாரி என்பவர் பார்ப்பனப் புரோகிதர்கள் இல்லாமலே விசுவகரும வகுப்பினர் வீட்டில் திருமணத்தை நடத்திக் காட்டினார். பார்ப்பனப் புரோகிதர்களை விலக்கி விசுவ கரும வகுப்பினர் திருமணம் நடத்தியது கலவரத்திலும் நீதிமன்ற வழக்கிலும் முடிந்தது. அப்படி அவர்கள் திருமணம் நடத்தியது செல்லும் என்று சித்தூர் அதாலத் கோர்ட் உரிமையியல் நீதிமன்றம் 15-12-1818-இல் தீர்ப்பு வழங்கியது. (பெரியாரியல், தொகுதி 1, பக்கம் 38-39). விசுவகரும வகுப்பினர் 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே பார்ப்பனப் புரோகிதப் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு விட்டனர். இந்த வரலாற்றுத் திருப்பத்தை உண்டாக்கியவர் பண்டித மார்க்கசகாய ஆச்சாரி என்ற உண்மை இங்கே பதிவு செய்யத் தக்கது.

கன்னியாகுமரி மாவட்டத்தைச் சார்ந்த வைகுண்டசாமி என்னும் பெரியவர் 19-ஆம் நூற்றாண்டின் முன் பாதியில் வாழ்ந்தவர். இவர் மேல் சாதி ஆதிக்கக் கொடுமைகளை நேரில் கண்டு ஆதிக்க எதிர்ப்புணர்வைப் பெற்றவர். அக்காலத்தில் திருவிதாங்கூர் மன்னர் ஆட்சியில் பெண்கள் மார்பை மறைத்து மேலாடை போடுவதையும் ரவிக்கை போடுவதையும் அரசாங்கமே தடை செய்திருந்தது. வைகுண்டர் அய்யா அவர்கள்தான் தோள்சீலைப் போராட்டம் நடத்திப் பெண்களுக்கு நேர்ந்த அவமரியாதையைப் போக்கிப் பெண்களை மேலாடை அணியச் செய்தார். ஆண்களைத் தலைநிமிரச் செய்து அவர்களுக்குத் தலைப்பாகை அணிவித்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்த வள்ளலார் சாதி மதக் கொடுமைகளை ஒளிவுமறைவு இல்லாமல் கண்டித்தார்.

'சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச்சண் டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்'

என்று அவர் பாடிய பாடல் பகுதி அப்போதைய சமுதாய நிலையையும் சமுதாயக் கேடுகளை அவர் எதிர்த்து நின்ற பாங்கையும் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

பண்டித அயோத்தி தாசர் என்பவர் 1845 இல் தோன்றி 1914 வரை வாழ்ந்தவர். இவர் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு படித்தவர். திருக்குறள் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டவர். மரபு கடந்து சிந்திக்கும் இயல்பினர். சாதி மதக் கொடுமைகளை வன்மையாகக் கண்டித்தவர். இன்று நம் நாட்டில் காணும் பல்வகைக் கேடுகளுக்கும் சாதி மதக் கட்டுகளே காரணம் என்று இவர் உறுதிப்படுத்திக் கூறுகிறார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சென்னையில் இந்து சுயஞான சங்கம் என்று ஒரு அமைப்பு உருவாக்கப் பட்டது. இந்த அமைப்பின் மூலம் 1878-ஆம் ஆண்டு வாக்கில் 'தத்துவ விசாரிணி' என்று ஒரு இதழ் வெளியிடப்பட்டது. இது பின்னால் 'தத்துவ விவேசினி' என்று பெயர் மாற்றம் பெற்றது. இந்தச் சங்கமே "The Thinker" என்ற பெயரில் ஒரு ஆங்கில ஏட்டையும் வெளியிட்டது.

திரு பு. முனுசாமி நாயகர் அவர்கள் இந்த இரண்டு ஏடுகளையும் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். இந்த இரண்டு ஏடுகளும் பகுத்தறிவைப் பரப்பவும் சீர்திருத்த எண்ணத்தை வளர்க்கவுமே நடத்தப் பட்டிருக்கின்றன. அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர் அவர்கள் எழுதிய இந்துமத ஆபாச தரிசினி என்ற நூலுக்குத் திரு முனுசாமி நாயக்கர் முன்னுரை போல ஒரு சாற்றுக்கவி வழங்கி யிருக்கிறார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தப் பெருமக்கள் இருவரும் மிகத் துணிவாக முன்வந்து பகுத்தறிவுப் பணியிலும் மக்கள் தொண்டிலும் முனைப்பாகச் செயல்பட்டிருக்கிறார்கள்.

இந்தப் பணிகள் யாவும் அன்றைய சூழலில் போற்றத் தக்க அரும்பணிகள் என்பதில் அய்யமில்லை. ஆனால், இந்தப் பணிகளெல்லாம் சாதி மத மறுப்பிலோ மூடநம்பிக்கை ஒழிப்பிலோ மிகப் பெரிய அளவுக்கு வெற்றி கண்டு விட்டன என்று சொல்ல முடியாது. பெரியார் கண்ட சுயமரியாதை இயக்கத்தின் பணிகளுக்கு அவை முன்னோடிகளாக அமைந்தன என்பதை நாம் இங்கே நன்றியோடு குறிப்பிட வேண்டும்.

இந்தச் சீர்திருத்தப் பணிகளால் மக்கள் மத்தியில் சாதி சமய மறுப்பு உணர்ச்சியை எழுப்ப முடியவில்லை. மூடநம்பிக்கைப் பிடிப்பையும் சடங்குச் செல்வாக்கையும்

ஒழிக்க முடிய வில்லை. இப்படிப் பட்ட சூழலில்தான் பெரியார் அவர்கள் சுயமரியாதையைப் பற்றி, சுயமரியாதை உணர்ச்சியைப் பற்றித் திரும்பத் திரும்ப அழுத்தந் திருத்தமாகப் பேசுகிறார்.

இங்கே உள்ள வெகுமக்களின் வரலாற்றைக் கொஞ்சம் ஊன்றிக் கவனித்தால் மிகச் சிறந்த மான உணர்ச்சிக்கும் சுயமரியாதைக்கும் இவர்கள் சொந்தக்காரர்கள் என்பது தெளிவாகப் புலனாகிறது. ஆங்காங்கே அவ்வப்போது சிலரால் சில தொய்வுகள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால், ஒட்டுமொத்தமாகப் பொதுநோக்கில் பார்க்கும்போது கொடைப் பண்பும் பெருந்தன்மையும் மானமும் வீரமும் பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தின் முதுகெலும்பாகவும் உயிர்நாடியாகவும் திகழ்ந்திருக்கின்றன என்பது யாருக்கும் எளிதில் தெளிவாக விளங்கும்.

# 3. தமிழ்ப் பண்பாட்டு வரலாற்றில் சுயமரியாதை

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்' - திருக்குறள்

தமிழ்ப்பண்பாட்டு வரலாற்றில் வீரத்திற்கும் மானத்திற்கும் ஒரு சிறப்பிடம் வழங்கப் பட்டிருந்தது என்பது நம் எல்லோருக்கும் தெரியும். பழந்தமிழகத்தில் ஆண்களுக்கு வீரம் சிறந்ததாகக் கருதப்பட்டது போலப் பெண்களுக்குக் கற்பு சிறந்ததாகக் கருதப் பட்டது. சங்கத் தமிழக ஆடவர்கள் நீண்ட காலம் வாழ்வதைப் பெரிதாக மதிக்க வில்லை; வீரஞ்செறிந்த வாழ்வையே பெரிதாக மதித்தனர். அன்றைய சமுதாயமும் அப்படிப் பட்ட மனப் போக்கில்தான் இருந்தது.

அஞ்சா நெஞ்சங் கொண்ட மான மறவர்களை மக்களாகப் பெறுவதைத் தாய்மார்கள் பெரும்பேறாகக் கருதினர். இல்லையென்று இரப்போர்க்கு இல்லையென்று உரையாத இதயம் வேண்டும் என்று விரும்பினர். ஈதல் இயையாக் கடை சாதலும் இனிது என்று கருதினர். ஒருவரிடம் சென்று ஈ என்று இரப்பது இழிவாகக் கருதப் பட்டது. ஈ என்று ஒருவன் வந்து இரந்தபோது ஈயேன் என்று சொல்ல நேர்ந்தால் அது முன்னதை விட இழிவாகக் கருதப் பட்டது. கேட்காத பொழுதே கூட ஒருவனின் தேவை அறிந்து இதை நீ வைத்துக்கொள் என்று கொடுப்பது உயர்ந்தது. அப்படி ஒருவர் கொடுக்கும்போது இது எனக்கு வேண்டாம், கொள்ளேன் என்று மறுப்பது கொடுப்பதைவிட உயர்ந்ததாகக் கருதப் பட்டது.

மதிக்கத் தகுந்த நல்ல மனிதன் அன்றைய சமுதாயத்தில் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவான். அறத்துக்குப் புறம்பான வழிகளில் பொருளீட்ட விரும்ப மாட்டான். தன்னை விரும்பாத பெண்டிரை வற்புறுத்தித் தழுவ மாட்டான். புகழுக்கு உரிய பணி என்றால் அதை நிறைவேற்ற உயிரைக்

கொடுக்கவும் தயங்க மாட்டான். பழியை உண்டாக்கும் பணி என்றால் அதை நிறைவேற்றுவதால் உலகமே தன் கைக்கு வருவதாக இருந்தாலும் ஏற்கமாட்டான். தனக்கென உழைப்பதைப் பொருட்படுத்தாமல் பிறர்க்கென உழைப்பதில் பெருமைப் படுவான். பழி பாவங்களுக்கு அஞ்சி நாணுவான். நாணத்தையும் மானத்தையும் துறக்க வேண்டி நேர்ந்தால் அவற்றைத் துறந்து உயிர்வாழ மாட்டான், மாறாகத் தன் உயிரையே துறந்து விடுவான்.

மதிக்கத் தகுந்த நல்ல பெண்மணி பெண்களுக்கே உரிய நாணத்தை உயிரினும் மேலானதாகக் கொள்ளுவாள். அந்த நாணத்தை விடவும் குற்றமற்ற கற்பினை மேலானதாகக் கருதுவாள். கணவன் வருமானத்துக்கு ஏற்றபடி குடும்பத்தை நடத்திக் குடும்பத்தை விளங்க வைப்பாள். சமுதாயத்தில் தன்னால் தன் கணவனது புகழுக்குக் குறை ஏற்படாத வண்ணம் நடந்துகொள்ளுவாள். தான் பிறந்த குடிக்கும் புகுந்த குடிக்கும் பெருமை சேர்ப்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பாள். அதன்பொருட்டு எந்தத் துன்பத்தையும் மகிழ்ச்சியோடு தாங்கிக் கொள்ளுவாள். தான் பெற்ற மகன் இக்கட்டான நேரங்களில் வழிதப்பி வாழ்வதைவிட நேரான வழியில் போராடி மானங்காத்து மடிவதையே விரும்பி யிருக்கிறாள். தான் பெற்ற மகள் அவள் விரும்பியவனை மணந்து இல்லறத் தலைவியாகி அவள் புகுந்த வீட்டின் குடும்ப நிலையை அறிந்து அதற்கேற்ப ஒழுகுவதைக் கண்டு அறிவும் ஒழுக்கமும் யாண்டு உணர்ந்தனள்கொல் என்று மகிழ்ந்தும் வியந்தும் பாராட்டுகிறாள்.

ஆடவர்கள் இளமை இன்பத்தைப் பொருட்படுத்தாமல் செயலூக்கத்தையே போற்றுபவர்களாக இருந்திருக்கிறார்கள். அதே வேளையில் பெண்டிர் ஆடவரின் செயலூக்கம் கண்டு உள்ளூர மகிழ்ந்தாலும் இளமை இன்பத்தை இழந்துவிடக் கூடாது என்பதில் கருத்தாக இருந்து ஆடவர்க்கு அதை அவ்வப்போது மனங்கொள உணர்த்தி யிருக்கிறார்கள். வீட்டுக்கு வந்த விருந்தினரைக் கணவனோடு இருந்து வரவேற்று உணவளித்து ஓம்புவதை இல்லறத் தலைவி தான் காக்க வேண்டிய உயர்ந்த ஒழுக்கமாகக் கொண்டிருக்கிறாள். தலைவனும் தானும் ஒருங்கு இருந்து விருந்தோம்பும் வாய்ப்பு

கைநழுவிப் போனால் தலைவி அதை மிகப் பெரிய இழப்பாகக் கருதி வருந்தியிருக்கிறாள். ('தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை' என்று கோவலனிடம் கண்ணகி வருத்தத்தோடு சொல்லுவது நம் காதில் கேட்கிறது).

மான உணர்ச்சி உயிர் போலக் கருதப்பட்டிருக்கிறது. அது உயிரைவிடப் பெரிதாகவும் மேலானதாகவும் போற்றிக் காக்கப் பட்டிருக்கிறது. மானம் என்றால் என்ன? மானம் என்பதற்கு உரிய அடிப்படைப் பொருள் அளவு என்பதாம். இன்றும் பேச்சு வழக்கில் அம்மான், இம்மான், எம்மான் ஆகிய சொற்கள் முறையே அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு ஆகிய பொருள்களில் ஆளப் படுவதைக் காணலாம். மான் என்ற அடிச்சொல் அம் விகுதி பெற்று மானம் என வந்தது. மானம் என்பது எல்லை என்று பொருள்பட்டது. இதுவே ஆகுபெயராய் எல்லை கருதிய உணர்ச்சியைக் குறித்தது. மான உணர்ச்சிக்குப் பரிமேலழகர் மிகச் சிறப்பாக ஒரு விளக்கம் தருகிறார். அதை இங்கே அப்படியே குறிப்பிட வேண்டும்.

"மானமாவது எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தான் தாழ்வு வந்துழி உயிர்வாழாமையும் ஆம்."

தம் திறமையை மீறி விதியின் வலிமையால் தாழ்வு வந்த ஞான்று என்பதனைப் பரிமேலழகர் தெய்வத்தான் தாழ்வு வந்துழி என்று கூறுகிறார். தாழ்வு வந்தபோது மானங் காக்க வேண்டி அவர்கள் வாழ மறுக்கிறார்கள். சேரமான் கணைக்கால் இரும்பொறை எதிரி அரசனால் மரியாதைக் குறைவாக நடத்தப் பட்ட போது அந்தத் தாழ்வைத் தாங்க முடியாதவனாய் அதற்கு மேல் வாழ மறுத்து உயிர் துறக்கிறான். போர்க்களத்தில் கரிகால் பெருவளத்தான் எதிரில் நின்ற சேரமான் பெருஞ்சேரலாதனுடைய மார்பைக் குறிவைத்துச் செலுத்திய வேல் மார்பில் பாய்ந்து ஊடுருவி முதுகுப்புறமாக வெளியேறியது. முதுகில் ஏற்பட்ட புண் புறப்புண்ணாகத்தானே தோன்றுகிறது என்று கருதி அந்தப் புறப் புண்ணுக்கு நாணிச் சேரமான் பெருஞ்சேரலாதன் அதற்கு மேல் உயிர்வாழ விரும்பவில்லை. புறப்புண் நாணி வடக்கிருந்து உயிர் துறக்கிறான்.

நாணுதல் என்ற கருத்து இங்கே நன்கு விளங்கிக் கொள்ள வேண்டிய ஒன்று. முதலாவதாக இந்த நாணம் பெண்களுக்கு உரிய இயல்பான நாணத்திலிருந்து வேறுபட்டது என்பதை விளங்கிக் கொள்ள வேண்டும். நாணாவது பழிபாவங்களுக்கு அஞ்சுதல். “சால்பு பண்பு முதலிய குணங்களான் உயர்ந்தோர் தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதல் உடையராந் தன்மை,” என்று பரிமேலழகர் விளக்கம் கூறுவார் (நாணுடைமையில் காணும் அதிகார முன்னுரை). தன் நிலைக்குத் தகாதன செய்யக் கூசுதலே நாணமாம். பழி பாவங்கள் புகுதாமல் காக்கும் வேலி என்று நாணத்திற்கு இன்னொரு இடத்தில் பரிமேலழகர் விளக்கம் சொல்லுகிறார் (குறள். 1016. உரைப் பகுதி).

அன்றைய சமுதாயம் நாணத் தக்கன தவிர்க்க என்றும் பெருமைப்படத் தக்கன செய்க என்றும் கற்பித்திருக்கிறது. மனிதனை உயர்த்துவது எது, கீழே இழுப்பது எது என்று உணர்ந்து கருத்து வகையால் இது உயர்ந்தது இது இழிந்தது என்று சங்கத்துச் சான்றோர் சொல்லியிருக்கும் பாங்கு இன்றும் போற்றத் தக்கதாக உள்ளது. சொல்லியுள்ள முறையால் அந்தக் கருத்து மனத்தில் விதைக்கப் பட்டு விடுகிறது.

“ஈ என இரத்தல் இழிந்தன் றதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன் றதனெதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று”

என்று கழைதின் யானையார் பாடிய பாடல் வரிகள் (புறம். 204) நம் மனத்தில் ஆழமாகப் பதிந்து கிடக்கின்றன. கிட்டத்தட்ட இதே பாங்கில் திருவள்ளுவரும் “நல்லாறெனினும் கொளல்தீது மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று” என்று இயல்பாக எடுத்துரைக்கிறார்.

சங்கத் தமிழ் மரபுக்கு ஈதலின்மேல் இருந்த நாட்டம் ஈடு இணையற்றதாக உயர்ந்து விளங்குகிறது. ‘செறாஅது- ஈதல் இரந்தோர்க்கொன் றாற்றாது வாழ்தலின் சாதலும் கூடுமாம் மற்று’ (கலி. 61), என்றும் ‘இல்லென இரந்தோர்க்கொன் றீயாமை இழிவு’ (கலி. 2), என்றும் இன்மை உரைத்தார்க்கு அது நிறைக்கல் ஆற்றாக்கால் தன்மெய் துறப்பான் (கலி. 43)

என்றும் சங்கச் சான்றோர்கள் எழுப்பும் குரலில் ஒரு ஒருமைப் பாடு தெரிகிறது.

> "சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
> ஈதல் இயையாக் கடை"

என்ற குறளிலும் இதே அடிநாதந்தான் கேட்கிறது. சங்கத் தமிழ் மரபில் காணும் ஈகை 'இதற்கு இது' என்ற எதிர்பார்ப்போடு வாணிபநோக்கில் வளர்ந்த ஈகை அல்ல. ஈகை என்பது அன்றைய புரவலர்களின் இயல்பாக அல்லது பிறவிக் குணமாக இருந்திருக்கிறது.

> "இம்மை செய்தது மறுமைக் காமெனும்
> அறவிலை வணிகன் ஆயலன்"

என்று ஆய் என்ற வள்ளலை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடிய வரிகளும்

> "எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
> மறுமை நோக்கின்றோ அன்றே, பிறர்
> வறுமை நோக்கின் றவன்கை வண்மையே"

என்று வையாவிக் கோப்பெரும் பேகனைப் பரணர் பாடிய வரிகளும் புரவலர்களுக்கு இருந்த ஈகை நாட்டம் அவர்களின் இயல்பு என்பதையும் எந்த எதிர்பார்ப்பும் இல்லாதது என்பதையும் நமக்கு உணர்த்துகின்றன.

ஈதலும் ஏற்றலும் பழந்தமிழ்ப் பண்பாட்டில் மானம், நாணம், சுயமரியாதை முதலான பண்புகளோடு நெருங்கிய தொடர்புடையனவாக உள்ளன. இரத்தலிலும் ஈதலிலும் ஏற்படும் மன உணர்ச்சிகளும் மனித உறவுகளும் பண்டைய இலக்கியங்களில் மிக நுட்பமாகவும் அழகாகவும் புலப்படுத்துகின்றன. இரப்பது கூட ஈவதைப் போலத்தான் என்கிறார் வள்ளுவர். இது ஏதோ புதிர் போடுவது போல இருக்கிறது. அடுத்த தொடரில் அந்தப் புதிரை விடுவிக்கிறார். இருப்பதை இரப்போர் காணாமல் ஒளித்து வைத்துவிட வேண்டும் என்று கனவிலும் நினைக்காதவரிடத்தில் இரப்பது ஈவதைப்போலத்தான். அப்படிப் பட்டவரிடம் இரப்பதில் இழிவும் இல்லை, துன்பமும் இல்லை. இது ஒரு புதுமையான மன உணர்ச்சி. வள்ளுவர் வாக்கிலேயே இந்தக் கருத்தை நாம் நினைவில் வைத்துக் காக்க வேண்டும்.

"இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு"

என்பதுதான் அந்தக் குறள் (குறள். 1054).

சமுதாயத்தில் தருவோனுக்கும் பெறுவோனுக்கும் இருக்கிற பொது உறவுக்கும் சங்க காலப் புரவலர் புலவர் உறவுக்குமிடையே நுட்பமான வேறுபாடு இருக்கிறது. அதை நாம் சரியாக உணர்ந்து கொள்ள வில்லையானால் சங்க இலக்கியம் படித்துப் பயனில்லை. புலவர்கள் பரிசிலை மட்டும் பறித்துக் கொண்டு ஓடுவதற்காகப் புரவலர்களிடம் வந்து நிற்க வில்லை. புலவர்களுக்குப் பரிசில் மட்டும் போதாது, பாராட்டும் வேண்டும், மரியாதையும் வேண்டும். நேரில் பார்க்காமல் கொடுத்தனுப்பிய பரிசிலைப் புலவர் பெருஞ்சித்திரனார் ஏற்க மறுக்கிறார். 'காணாது ஈத்த இப்பொருட்கு யானோர் வாணிகப் பரிசிலேன் அல்லேன்' என்று பாடிவிட்டுப் பெருஞ்சித்திரனார் பரிசிலை ஏற்க மறுத்து விடுகிறார். பெருஞ்சித்திரனார் வேறொரு புரவலரைப் பார்க்கச் சென்ற போது அங்குக் கிடைத்த பரிசில் மனமுவந்து வழங்கப் பட வில்லை. பெருஞ்சித்திரனார் அந்தப் பரிசிலை ஏற்க மறுத்து அந்த அரசனிடம் 'பெரிதே உலகம் பேணுநர் பலரே' என்று சொல்லிவிட்டு அந்த அரசனை விட்டு நீங்குகிறார் (புறம் 207).

அதியமான் நெடுமான் அஞ்சியின் அரண்மனையில் உரிய முறையில் வரவேற்பு கிடைக்காததால் அவ்வையாரின் உள்ளம் வருந்துகிறது. 'கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி தன்னறி யலன்கொல்? என்னறியலன்கொல்?' என்று வாயிற்காவலனைப் பார்த்துக் கேட்கிறார். அதன் பிறகு அந்த வாயிற்காவலனிடம் 'எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே' என்று சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டு நீங்குகிறார்.

எமக்குப் பரிசு கொடுப்பவர் முடியுடை வேந்தர் மூவரில் ஒருவராகவே இருந்தாலும் விருப்பமில்லாமல் கொடுக்கும் பரிசிலை யாம் ஏற்க மாட்டோம் என்று புலவர் பெருந்தலைச் சாத்தனார் கடியநெடு வேட்டுவனை எச்சரித்து விட்டுப் போகிறார். ஆய் அண்டிரனைப் பாடிப் பரிசில் பெற்ற புலவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் 'பீடின்று பெருகிய திருவின் பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே' என்கிறார். ஒரு அரசனிடம் செல்வம் சேர்ந்து விட்டது

என்பதற்காக அவனை நாங்கள் பாடுவதில்லை. பெருந்தன்மை இல்லாத அரசனை, பெருமை இல்லாத அரசனை நாங்கள் பாட மாட்டோம், செல்வத்தோடு பெருந்தன்மை இருந்தால்தான் செல்வத்திற்குச் சிறப்பு என்ற குறிப்பில் அப்படிப் பாடிவிட்டுப் போகிறார்.

பரிசில் பெறுகிற ஒரே நோக்கத்தில் ஒருவன் செய்யாததை யெல்லாம் செய்ததாகக் கூறிப் புகழும் வழக்கம் சங்கப் புலவர்களிடம் இருந்ததில்லை. கண்டிரக் கோப்பெரு நள்ளியைப் பாடிய வன்பரணர் 'செய்யா கூறிக் கிளத்தல் எய்யாதாகின்று எம் சிறு செந்நாவே' என்று பாடியிருக்கிறார். புலவர்கள் அரசர்களைப் புகழ்ந்து பாடுவதென்பது போர்க்களத்தில் பெறும் வெற்றியைவிடச் சிறந்ததாகக் கருதிப் போற்றப்பட்டிருக்கிறது. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வயதில் மிக இளையவனாக இருக்கும் பொழுதே தன்னை எதிர்த்து நின்ற மன்னர்கள் எழுவரோடு போரிட நேருகிறது. அப்போது இவன் உரைத்த வஞ்சினம் பல வகையில் சிறப்பு வாய்ந்தது. அன்றைய தமிழகத்தில் நிலவிய மானம், வீரம், பெருமிதம், பொறுப்பு முதலான கோட்பாடுகள் எப்படிப் பட்டன என்பதை இந்த வஞ்சினப் பகுதி நமக்கு உணர்த்துகிறது. அந்த வஞ்சினப் பகுதியை மட்டும் அப்படியே இங்கே தருகிறோம்.

"சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎ னாயின் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழல் காணாது
கொடியனெம் இறையெனக் கண்ணீர் பரப்பி
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக என் நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க்கீயா இன்மையான் உறவே."

தன் குடியால் பழிதூற்றப்படும் கொடுங்கோலன் ஆதலும், புலவர்களால் தன் நிலவெல்லை பாடப்படாது

ஒழிதலும் இரப்போர்க்கு ஈய இயலாத இன்மையைத் தான் அடைதலும் ஒரு அரசனுக்கு மிக இழிவானதாகக் கருதப் பட்டிருக்கிறது என்பது மேற்கண்ட வஞ்சினப் பகுதியால் நமக்கு நன்கு விளங்குகிறது. இந்த இழிவுகளுக்கெல்லாம் ஒரு அரசன் இடங்கொடுத்து விட்டால் அவனுக்கு உரிய மரியாதை கிடைக்காது. இந்த இழிவுகள் வராமல் பார்த்துக் கொண்டால்தான் அரசனுடைய சுய மரியாதை பாதுகாக்கப் படும்.

பாதுகாப்புக் கேட்டு வந்தாலும் உதவி கேட்டு வந்தாலும் கேட்டதை வழங்குவதுதான் அரசனுக்கு உரிய பெருந்தன்மை என்று சங்க காலத் தமிழக அரசர்கள் கருதியிருக்கிறார்கள். கேட்பவன் எதிரி அரசனாக இருந்தாலும் அவன் தன்னிடம் வந்து பணிவோடு இதை எனக்கு ஈக என்று கேட்பானாயின் அதை அவனுக்குச் சங்க காலத் தமிழ் மன்னன் கரவாமல் மறுக்காமல் தந்துவிடவே முன்வருபவனாக இருந்தான். அந்த உள்ளத்தின் அடித்தளத்தை ஆராய்ந்து பார்த்தால் அது முரண்பாட்டை வெறுத்தது என்பதும் நல்லிணக்க உறவை விரும்பியது என்பதும் புரிகிறது.

முரண்பாடும் ஒரு உறவுதான். அதாவது, பகைமையும் ஒரு தொடர்புதான். பகைமை உறவில் விளைவது அச்சமும் மரணமும் ஒரு பக்கம்; வெற்றியும் மகிழ்ச்சியும் இன்னொரு பக்கம். ஆனால் அங்கு ஏற்படுகிற வெற்றியும் மகிழ்ச்சியும் குருதிக் கறை படிந்தவை. அவை விரும்பத் தக்கவை அல்ல என்பது காலங்கடந்துதான் விளங்குகிறது. உடையவனின் இசைவு பெறாமல் அவன் இசைவைப் பற்றிக் கவலைப் படாமல் ஒரு பொருளை இன்னொருவன் எடுத்துக் கொள்ள முயன்றால் அது ஆக்கிரமிப்பு; உ்டையவனுக்குத் தெரியாமல் கவர்ந்து கொள்ள முயன்றால் அது அபகரிப்பு அல்லது திருட்டு. ஆக்கிரமித்தாலும் அபகரித்தாலும் உடையவன் சீண்டப் படுகிறான். அப்படிப் பட்ட நேரங்களில் ஆற்றல் வாய்ந்த அரசன் மொழிகின்ற வஞ்சினம் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்ததாக அமைந்து விடுகிறது. சோழன் நலங்கிள்ளி மொழிகின்ற வஞ்சினம் ஒன்றைப் பாருங்கள்.

"மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி
ஈ யென இரக்குவ ராயின் சீருடை

முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்
இன்னுயி ராயினும் கொடுக்குவென் இந்நிலத்து
ஆற்ற லுடையோர் ஆற்றல் போற்றாதென்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்திண் நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎ னாயின் பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் தாரே."

*(புறம். 73) சோழன் நலங்கிள்ளி பாடியது.*

*நலங்கிள்ளியின் இருப்பை மதியாத அரசன் மடவோன் என்றும் சிதடன் என்றும் இகழப் படுகின்றான். என் ஆற்றலைப் போற்றாது என் உள்ளம் எள்ளிய மடவோன் என்றும் தூங்குகிற புலியை இடறிய சிதடன் போலப் பிழைத்துப் போதல் அரிதே என்றும் சோழன் நலங்கிள்ளி சொல்லும்போது அவனுடைய சீற்றமும் சீற்றத்துக்கு உரிய காரணமும் பளிச்சென்று விளங்குகிறது. இப்படிப் பட்ட சூழலில் சீற்றம் தலைக்கு ஏறும்போது தான் என்ன செய்கிறோம் என்று தெரியாமல் ஒருவன் இன்னொருவனுடைய மரியாதையைச் சீர்குலைத்து விடுவதும் உண்டு.*

*சுயமரியாதை ஒரு கொள்கையாக உருப்பெற்ற காலத்தில் ஒரு சுயமரியாதைக்காரன் தன் சுயமரியாதையைக் காத்துக் கொள்ளுவது போலவே அடுத்தவருடைய சுயமரியாதையையும் காப்பாற்ற வேண்டும் என்பது நன்கு வற்புறுத்தி அறிவுறுத்தப்பட்டது. சுயமரியாதை என்பது ஒரு குறிப்பிட்ட மனிதனுக்கு உள்ள சுயமரியாதை மட்டும் அல்ல; ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ள சுயமரியாதை. இந்த உண்மையை நாம் நன்கு நினைவில் கொள்ள வேண்டும்.*

*சங்க காலத் தமிழ்ச் சமுதாயம் எளியோரைக் காப்பதில் கருத்தாக இருந்திருக்கிறது. போர்க் காலங்களில் எளியோரைக் காப்பது என்பது அரசர்களுக்குத் தலையாய கடமையாகப்*

போற்றப் பட்டிருக்கிறது. அதனால்தான் நெட்டிமையார் என்ற புலவர்

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை மரத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே."

என்று எளியோரைக் காக்கும் இயல்புக்குச் சிறப்பிடம் கொடுத்துப் பாடிப் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்துகிறார். எளியோரைக் காக்க வேண்டும் என்ற இந்த மரபிற்கு அன்று இருந்த செல்வாக்கின் காரணமாகத்தான் சினம் மிகுந்து மதுரையைக் கண்ணகி எரியூட்டிய போது

'பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்க'

என்று அங்கியங் கடவுளுக்கு ஆணை யிடுகிறாள்.

எளியோரைக் காப்பதும் இரந்தோர்க்கு ஈவதும் மனிதனுக்கு உரிய பொது அறங்களாகக் கருதப் பட்டிருக்கின்றன. மேலே கூறிய வாழ்வியல் பண்புகள் நினைக்கும்போதே நெஞ்சுக்குச் சுகமளிப்பனவாக இருக்கின்றன.

# 4. சுயமரியாதை வெளிச்சங்கள்

## அன்று முதல் இன்றுவரை

"ஆறறிவு படைத்த மனிதன் தன்னைப் போன்ற இன்னொரு மனிதனுக்கு அடிமைப் பட்டிருப்பதும் அடங்கி இருப்பதும் அவனுடைய பிறப்புரிமை அல்லது பிறப்பின் சிறப்புத் தன்மை என்பதற்கு நேர் எதிரானதேயாகும். இந்த இழிந்த நிலைக்கு மனிதன் ஆளானதற்கு அடிப்படைக் காரணம், மனிதன் தன் பிறப்புரிமை என்கிற தன்மானத்தைக் காக்கத் தவறியதும் பிறிதொரு மனிதனுடைய தன்மானத்தைப் பறிப்பதுமேயாகும். இதற்குப் பெரிதும் அடிப்படையாக விளங்குவது ஒரே உயிரின வகையைச் சார்ந்த மாந்தர் இனத்தில் இயற்கைக்கு மாறான - இயல்பிலேயே இடம்பெற்றிராத செயற்கைத் தடைகளை - பேதங்களை-வேறுபாடுகளை மனிதருள் சிலர் உருவாக்கிவிட்டதே யாகும்.

"ஆறறிவு என்கிற பகுத்தறிவு பெற்ற ஒவ்வொரு மனிதனும் இந்தச் செயற்கைத் தடைகளை உடைத்தெறிந்து விட்டுத் தன்மானம் அல்லது சுய மரியாதை என்கிற மனிதனின் பிறப்புரிமையை நிலைநாட்ட வேண்டும் என்பதே மேலே அவர் (பெரியார்) கூறியுள்ள கருத்தின் பொருளாகும்." (திருச்சி வே ஆனைமுத்துவின் 'பெரியாரியல்' தொகுதி 1, பக்கம். 158).

சுயமரியாதை வெளிச்சம் தமிழ்ச் சமுதாயத்தில் கூடுதலாகவோ குறைவாகவோ இருந்திருக்கலாம். ஆனால் அந்த வெளிச்சம் ஒரு காலத்திலும் இல்லாமல் போனதில்லை. எப்போதும் தமிழ் மண்ணில் சுயமரியாதை அனுபவ வெளிச்சம் தமிழ் நெஞ்சங்களுக்கு வழிகாட்டி வந்திருக்கிறது

தமிழகம் என்ற உடனே நம் எல்லோருக்கும் கண்முன் தோன்றுகின்ற நிலப்பரப்பு எது? கேரளமாய்க் கருநாடகமாய் ஆந்திரமாய்ப் பாண்டிச்சேரியாய்ப் பிரிக்கப் பட்டு மீதமாய் நெருங்கிச் சுருங்கி வறண்டு சுருண்டு சிறுபான்மையரின் செல்வாக்கிலே சிக்கித் தவித்துச் சீர்குலைந்து உருக்குலைந்து கிடக்கும் நிலப்பரப்புதான் கண் முன் தோன்றுகிறது இந்தத்

தமிழகம் உலக நாடுகள் பெற்றுள்ள அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சிகளைப் பெற்றுப் புதுக் கோலம் பூண்டிருப்பதெல்லாம் நமக்கு நன்றாகத் தெரியும். அதே வேளையில், இந்த மண்ணின் வரலாற்றையும் தனித்தன்மைகளையும் பெருமைக்குரிய நிகழ்வுகளையும் எண்ணிப் பார்ப்பதும் அவற்றிலிருந்து பாடங்கற்பதும் பயன்பெறுவதும் நாம் உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டிய உரிமை.

சங்க இலக்கியம் காட்டுகிற தமிழகம் ஒடுங்கிச் சுருங்கிக் கிடக்கும் இன்றைய தமிழகம் அல்ல. அது விரிந்த தமிழகம். பரந்து நிலைபெற்ற தமிழகம். காவா நாவின் கனகனும் விசயனும் விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கெனக் கூற்றங் கொண்டிச் சேனை செல்வது என்று வடநாட்டுப் படையெடுப்பின் போது சஞ்சயனிடம் பெருமிதத்தோடு பேசிய சேரன் செங்குட்டுவன் ஆட்சி செய்த மண் அப்போதிருந்த தமிழ்மண். தமிழர்களுக்கு இன்றும் அந்த மண்ணின் மீதும் மக்கள் மீதும் அந்த மண்ணின் பழைய வரலாற்றின் மீதும் பற்றும் பாசமும் குறையவில்லை. சேர மன்னர்கள் ஆண்ட கேரளப் பகுதியும் எருமையூரன் ஆட்சி செய்த கருநாடகப் பகுதியும் புல்லி ஆண்ட வேங்கடம் சார்ந்த ஆந்திரப் பகுதியும் சங்கத் தமிழகத்தில் அடங்கிய பகுதிகள். சங்க இலக்கியம் காட்டும் அன்றைய தமிழகம் ஒரு அகண்ட தமிழகம். (விளக்கங்களுக்குக் காண்க, A New Account of the History and Culture of the Tamils, by P Ramanathan M.A.,B.L. pp30-40).

தொல்வரலாற்றுக் காலத்தில் தமிழகம் இன்னும் பெரிய தமிழகமாக இருந்தது என்று ஆய்வுலகம் அறிவிக்கிறது. மறுப்பவர்கள் இருப்பார்கள். ஆய்வுலகில் மாற்றுக் கருத்துகள் வருவதில் ஒன்றும் வியப்பில்லையே. தொல்பழந் தமிழகத்தின் எல்லையைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியனை மாங்குடி மருதனார் பாடும்போது,

"தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லை
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப"

என்று பாடுகிறார் (மதுரைக் காஞ்சி 70-72). அவனுடைய ஆட்சிப்பகுதியின் வடவெல்லை இமயம், தென்னெல்லை குமரி, மேற்கெல்லையும் கிழக்கெல்லையும் கடல். இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாடிய குமட்டூர்க் கண்ணனாரும் அவனுடைய ஆட்சிப் பகுதியின் வடவெல்லை இமயம் என்றும் தென்னெல்லை குமரி என்றும் குறிப்பிடுகிறார் (பதிற்றுப் பத்து 11: 23-24).

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பாடிய பாடலில் பரணர் அவனுடைய ஆளுகைப் பகுதியின் எல்லையாகப் பரணர் வடதிசை எல்லை இமயம் என்றும் தென்திசை எல்லை குமரி என்றும் கூறுகிறார் (பதிற்றுப் பத்து 43: 7-8).

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய பாடலில் காரிகிழார் அவன் செல்வாக்கிற்கு உட்பட்ட எல்லையைப் பின்வருமாறு குறிக்கிறார்

''வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பவ்வத்தின் குடக்கும்''
(புறநானூறு 6)

என்று அப் பாடல் தொடர்கிறது.

யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பாடிய குறுங்கோழியூர் கிழாரும் மேலே சுட்டியது போல அந்த அரசனின் ஆளுகை எல்லையைக் குறிக்கிறார். அவருடைய பாடல்

''தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா வெல்லை
குன்றுமலை காடு நாடு
ஒன்றுபட்டு வழிமொழியக்
கொடிதுகடிந்து கோல்திருத்திப்
படுவதுண்டு பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல''  (புறநானூறு 17)

என்று தொடர்கிறது.

இந்தப் பாடற்பகுதிகளெல்லாம் நமக்கு உணர்த்தும் செய்திகள் என்ன? 1 அன்றைய தமிழ்மண்ணின் நிலப்பரப்பு பெரிதாக இருந்தது. 2 அரசனின் ஆட்சிப் பகுதிக்கு உரிய எல்லையைக் குறிப்பது ஒரு மரபாக இருந்திருக்கிறது.

பண்டைத் தமிழகத்தில் வறுமையால் வரும் இழிவு மனிதனை நிலை குலைய வைத்தது. தோல்வியால் வரும் இழிவு மனிதனைத் தலைகுனிய வைத்தது. தனிமனித மானத்துக்குக் கேடு நேரும்போது எதிர்த்து நின்று போராடுகிறான். போராட முடியாத போது வாழ்வையே வெறுத்து உயிர்துறக்கத் துணிகிறான். இழிவை ஏற்றுக் கொண்டு உயிர் துறக்கவும் முடியாமல் வாழும் வாழ்வு அடிமை வாழ்வாகக் கருதப் பட்டது. இழிவைத் தனி மனிதன் ஏற்றுக் கொள்ளுவது வேறு; ஒரு கூட்டமே ஏற்றுக் கொள்வது வேறு. தனக்கு வந்த தனிமனித இழிவை ஆண்மை வாய்ந்த வீரன் சந்திக்கும் போது உயிரைத் துச்சமாக மதித்துப் போராடுகிறான். போராட முடியாத இக்கட்டான நேரங்களில் மானத்தைப் பெரிதாக மதித்தவன் வடக்கிருந்து உயிர் துறக்கிறான்.

கோப்பெருஞ்சோழன் தன் மக்களே தன்னை மதிக்காமல் தனக்கு இழிவு சேர்த்த போது வெகுண்டெழுந்து போருக்குப் புறப்படுகிறான். மக்களோடு போரிடுவது உனக்கு அழகல்ல என்று சான்றோர்கள் அறிவுறுத்தும்போது அதை ஏற்றுக் கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்து உயிர் துறக்கிறான்.

சிறைக் கோட்டத்தில் கேட்டவுடன் தண்ணீர் கிடைக்காததால் மனம் நொந்து கணைக்கால் இரும்பொறை உயிர் துறக்கிறான். வெண்ணிப் போரில் கரிகால் பெருவளத்தான் செலுத்திய வேல் சேரமான் பெருஞ்சேரலாதனின் மார்பில் பாய்ந்து முதுகில் வெளிப்படுகிறது. முதுகில் ஏற்பட்ட புண் புறப்புண் என்றுதானே கருதப்படும் என்று எண்ணி அந்தப் புறப்புண்ணுக்காக நாணிச் சேரமான் பெருஞ்சேரலாதன் வாளோடு வடக்கிருந்து உயிர் துறக்கிறான். அவனுடைய மான உணர்ச்சி அதற்குமேல் அவனை வாழ விட வில்லை.

'வடவாரிய மன்ன ராங்கோர் மடவரலை மாலை சூட்டி உடனுறைந்த இருக்கைதன்னில் ஒன்றுமொழி நகையினராய்த்

தென்தமிழ்நா டாளும் வேந்தர் செருவேட்டுப் புகன்றெழுந்து மின்தவழும் இமய நெற்றியில் விளங்கு வில்புலிகயல் பொறித்த நாள் எம்போலும் முடிமன்னர் ஈங்கில்லை போலும் என்ற வார்த்தை' (சிலம்பு, வாழ்த்துக் காதை, உரைப் பாட்டு மடை), அந்த வார்த்தையை மொழிந்த கனக விசயர்தம் முடித்தலை மீது கண்ணகி சிலைக்கு உரிய கல்லைச் சுமத்தியது. அப்படிக் கல்லைச் சுமக்க வைத்தவன் சேரன் செங்குட்டுவன். தென் தமிழ் நாடாளும் வேந்தர் மூவரையும் பற்றிச் சொன்ன வார்த்தைதானே, நமக்கென்ன வந்தது என்று புறந்தள்ளாமல் தமிழுக்கு வந்த இழிசொல் தனக்கே வந்ததாகக் கருதிக் கிளர்ந்தெழுந்தான் சேரன் செங்குட்டுவன். சிலப்பதிகாரக் காலத்திலேயே இந்த மன்னன் மனத்தில் தனிமனிதச் சுயமரியாதை விரிவடைந்து தமிழ்வழிச் சுயமரியாதை தோன்றி விட்டது.

சங்கத் தமிழகத்தைப் பற்றியும் சங்கத் தமிழர்களின் சாதனைகள் பற்றியும் பேசும்போதெல்லாம் சிலர் ஆர்வத்தோடும் வியப்போடும் கேட்பார்கள். சிலர் புருவத்தை நெரித்து அப்படியா என்பார்கள். சிலர் இதைப்பற்றிக் கேட்க விருப்பமே இல்லாமல் முகஞ்சுளிப்பார்கள். சங்கத் தமிழர்களின் சாதனைகளைப் பற்றிப் பேசுபவர்களை ஏளனமாகப் பார்த்து இளப்பமாகச் சிரிப்பவர்களும் இன்றைய தமிழகத்தில் இன்னும் சிலர் இருக்கிறார்கள்.

அப்போதைய அகண்ட தமிழகத்தின் பரப்பு ஏறக் குறைய 4 லட்சம் சதுர கிலோ மீட்டர். இப்போதைய இளைத்த தமிழகத்தின் பரப்பு 1. 3 லட்சம் சதுர கிலோ மீட்டர். மக்கள் தொகை 6. 2 கோடி. உலகத்தைக் கட்டியாண்ட இங்கிலாந்தின் பரப்பு 2. 5 லட்சம் சதுர கிலோ மீட்டர். மக்கள் தொகை 6 கோடி. இங்கிலாந்தின் வரலாறு சங்கத் தமிழகத்தின் சாதனைகளுக்கு ஒரு சான்று போல இன்று நம் கண்முன் நிற்கிறது. மறுபடியும் சிலம்பு மணிமேகலை காலத்துக்கே சென்று திரும்புவோம்.

மணிமேகலை காலத்திலேயே வருணக் கருத்து தமிழகத்தில் நுழைந்து விட்டது. வருணக் காப்பிலள், பொருள்விலையாட்டி என்று இகழ்ந்தனன் ஆகி நயந்தோன்

என்னாது புதுவோன் பின்றைப் போனதென் நெஞ்சம், (மணிமேகலை, மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை, 87-89) என்று கூறித் தன் சுயமரியாதை உணர்ச்சியின் காரணமாக மணிமேகலை தன்னையே நொந்து கொள்கிறாள். மணிமேகலையின் அன்னை தன் மகளை மாபெரும் பத்தினி மகள் மணிமேகலை என்று கூறுவதற்கும் அவளுடைய மான உணர்ச்சி விழித்துக் கொண்டதே காரணம் என்று தெரிகிறது. இப்படிப் பட்ட மான உணர்ச்சியில்தான் சுயமரியாதை பிறக்கிறது. இந்தச் சுயமரியாதை உணர்ச்சியால்தான் மாதவி தன்னுடைய தாயை நோக்கி 'மணிமேகலையை வான்துயர் உறுக்கும் கணிகையர் கோலம் காணா தொழிக,' (சிலம்பு, நீர்ப்படைக் காதை 105-106) என்று ஆணை இடுகிறாள்.

மாதவி தன் தாய்க்கு அன்று இட்ட ஆணை சுயமரியாதை இயக்கம் தோன்றிய பிறகுதான் அரசு ஆணையாகவே மாறுகிறது. அதன் விளைவாக மகளிரில் ஒரு பகுதியினர் மீது சுமத்தப் பட்டிருந்த இழிவு நீங்கியது. டாக்டர் முத்துலட்சுமி .அம்மையாரின் கூர்மையான வாதத்தாலும் தளராத முயற்சியாலும் தக்க நேரத்தில் பெரியார் கொடுத்த ஆதரவுக் குரலாலும் தமிழகத்தில் பழமைவாதிகளின் எதிர்ப்பை முறியடித்துத் தேவதாசி முறை ஒழிப்புச் சட்டம் 1930-ஆம் ஆண்டிலேயே நிறைவேறியது.

உதயகுமரன் கொல்லப் பட்டான் என்ற செய்தியைக் கேட்ட உடனே சோழ வேந்தன் சோழிக ஏனாதியைப் பார்த்துச் சொல்லிய சொற்கள் அக்கால மன்னரின் நடுநிலை நெஞ்சையும் சுயமரியாதை உணர்ச்சியையும் காலத்தை வென்று நமக்கு உணர்த்திக் கொண்டு நிற்கின்றன. வேந்தன் என்ன சொன்னான் என்பதை இங்கே பதிவு செய்வது பொருந்தும்.

"யான்செயற் பாலது இளங்கோன் தன்னைத்
தான்செய் ததனால் தகவிலன் விஞ்சையன்
மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனில் இன்றால்
மகனை முறைசெய்த மன்னவன் வழி ஓர்
துயர்வினை யாளன் தோன்றினான் என்பது
வேந்தர் தம்செவி உறுவதன் முன்னம்

ஈங்கிவன் தன்னையும் ஈமத் தேற்றிக்
கணிகை மகளையும் காவல் செய்க.''

சோழ மன்னனின் கூற்றில் 'மாதவர் நோன்பும் மடவார் கற்பும் காவலன் காவல் இன்றெனில் இன்றால்' என்ற பகுதி நம் கவனத்தை ஈர்க்கிறது. அரசனுடைய ஆட்சி செங்கோலாட்சியாக அமையாமற் போனால் தாபதர்கள் நோன்பு நோற்க முடியாது, பெண்கள் கற்போடு வாழ முடியாது என்று சோழ வேந்தன் கூறுகிறான்.

'ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்'

'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை'

என்றெல்லாம் நாம் கேட்ட குரலுக்கு மாறாக ஒலிக்கிறது சோழ மன்னனின் குரல். அரசின் மேலாண்மையைச் சோழ மன்னன் குரல் உறுதிப் படுத்துகிறது.

'ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்'

என்று சொல்லும்போது வள்ளுவரும் அரசின் மேலாண்மையைத் தெளிவாக உறுதிப் படுத்துகிறார். இவ்வளவு வலிமையான அரசு தான் உறுதியாக ஒன்றைக் காக்கவோ நிறைவேற்றவோ நினைத்தால் அதை மாற்றுவதோ மீறுவதோ எளிதல்ல. சில நேரங்களில் சமுதாய வரலாறு அதை மாற்றியும் மீறியும் இருக்கிறது என்பது உண்மைதான் என்றாலும் அது இயல்பாகவோ எளிதாகவோ நடந்து விட வில்லை.

மக்களை நான்கு வகையாகப் பிரித்து அவர்களுக்குள் உயர்வு தாழ்வைக் கற்பித்து அதையே ஒரு அறமாக்கி அதற்கு வருணக் காப்பு என்றும் வருணாச்சிரம தர்மம் என்றும் பெயரிட்டு அரசே அதற்குப் பாதுகாப்பு வழங்கி யிருக்கிறது. மனித சமத்துவத்துக்கு எதிராக உள்ள இந்தக் கோட்பாட்டுக்கு அரசே பாதுகாப்பு வழங்கியது என்றால் மக்களின் நிலைமை எப்படி இருந்திருக்கும் என்று நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள். இரண்டாம் மகேந்திர வர்மன் வருணாச்சிரம தர்ம நெறிகளை மக்கள் கடைப் பிடிக்க வேண்டும் என்பதில்

மிகவும் கண்டிப்பாக இருந்தான் என்று பட்டயங்களும் கல்வெட்டுகளும் நமக்கு அறிவிக்கின்றன. முதலாம் பரமேசுவரனின் கூரம் பட்டயமும் நந்திவர்மனின் காசக்குடிப் பட்டயமும் இதைப் பற்றித் தெளிவாகவே பேசுகின்றன. அப்படிப் பட்ட சமுதாயச் சூழலில் 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்' என்றும் 'ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் அவரன்றே யாம் வணங்கும் கடவுளாரே' என்றும் பாடுவதற்கு ஒரு விதமான மக்கள் நேயச் சுயமரியாதை வேண்டும்.

பல்லவர்களுக்கு அடுத்து வந்த சோழப் பேரரசும் மறை நெறியைக் காப்பதிலும் மனு நெறியைக் காப்பதிலும் கருத்தாகவே இருந்திருக்கிறது. சோழப்பேரரசு பற்பல அரும்பெரும் பணிகளை நிறைவேற்றி உலக அரங்கில் தமிழர்களின் பெருமையை உயர்த்தியிருக்கிறது என்பது வெள்ளிடைமலையாக விளங்குகிறது. அதே நேரத்தில் வைதிக மேலாதிக்கமும் வடமொழி மேலாதிக்கமும் தமிழகத்தை ஆட்டிப் படைக்க இந்தப் பேரரசு வழிவகுத்தது என்பது வியப்புக்கும் வருத்தத்திற்கும் உரிய செய்தியாக இருக்கிறது.

மாங்குடி மருதன் போன்ற புலவர்களால் பாடப் படுவதைப் பெறற்கரும் பேறாகச் சங்கத் தமிழ் மன்னர்கள் கருதிப் புலவர்களைப் போற்றி யிருக்கிறார்கள். சோழப்பேரரசன் தன் நாட்டு எல்லையை விட்டு வெளியே செல்லுமாறு கம்பருக்கு ஆணையிட்டானாம். அப்போது கம்பர்

'மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ
உன்னையறிந் தோதமிழை ஓதினேன் - என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு'

என்று அரசனுக்கு மாற்றம் கொடுத்தாராம். இந்தப் பாடலுக்குள் புதைந்து கிடக்கிற சுயமரியாதை உணர்ச்சிக்கு வரலாற்றில் ஒரு சிறப்பான இடம் இருந்து வருகிறது. இந்தச் சுயமரியாதை உணர்ச்சிதான் குகன் வாயிலாகக் கம்பராமாயணத்தில் 'மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும் சரம் வாயாவோ?' என்று வெளிப்படுகிறது.

'கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ?'

என்று பரஞ்சோதியார் கேட்கும்போது அவருடைய மொழிவழிச் சுயமரியாதை வெளிப்படுகிறது. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன் என்று திருஞானசம்பந்தர் பாடும்போதும் செந்தமிழ்பயில்வோர் பின் திரிகின்றவன் என்று இறைவனை அருணகிரியார் பாடும்போதும் செந்நாப் புலவன்யான் போகின்றேன் நீயுமுன்றன் பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள் என்று திருமழிசையாழ்வார் பாடும்போதும் அருந்தமிழாற்றல் அறிந்தில ராங்கெனக் கூற்றம் கொண்டிச் சேனை செல்வது என்று செங்குட்டுவன் எழுப்பிய மொழிவழிச் சுயமரியாதைக் குரல் தொடர்ந்து ஒலிக்கக் கேட்டு நம் உள்ளம் சமயங் கடந்த நிலையில் பெருமிதங் கொள்கிறது.

கும்பகோணத்தில் பந்தியில் சாப்பிடும்போது ஒரு முறை ஒரு சோழியப் பிராமணனால் காளமேகப்புலவர் புறக்கணிப்புக்கும் அவமரியாதைக்கும் ஆளான போது,

"சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலையா - திருக்குடந்தைக்
கோட்டானே நாயே குரங்கே உனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்"

என்று அடங்காச் சினத்தோடு பாடுகிறார். காளமேகப் புலவரின் சுயமரியாதை உணர்ச்சி வருணதருமக் கட்டுக்கோப்பை யெல்லாம் மீறி வெடித்து வெளிப்பட்டிருக்கிறது.

துறவு நெறியை மேற்கொண்டு முற்றத்துறந்த துறவியாகி விட்ட பட்டினத்தார்க்கு ஏற்பட்ட கசப்பான அனுபவத்தின் விளைவாக அவர் மிகுந்த மனத் திண்மையோடு என்ன பாடுகிறார் என்று பாருங்கள்;

"இருக்கும் இடந்தேடி என்பசிக்கே அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தால் உண்பேன் - பெருக்க
அழைத்தாலும் போகேன் அரனே என் தேகம்
இளைத்தாலும் போகேன் இனி"

துறவியின் உள்ளத்திலும் சுயமரியாதை உனர்ச்சி முழு வீச்சில் வெளிப்பட்டு இப்படிப் பாடியிருக்கிறது. சுயமரியாதை உணர்ச்சி என்பது எல்லோருக்கும் பொது. அது மனிதனின் பிறப்புரிமை. ஒவ்வொரு மனிதனுக்கும் அது உயிருக்கு நிகரானது. பத்தும் பசிவந்திடப் பறந்து போம் என்று பாடினார் அவ்வையார். சுயமரியாதை உணர்ச்சி அப்படிப் பறந்து போகாது, போகக் கூடாது என்று உணர்த்துகிறது பட்டினத்தாரின் பாடல்.

விவேகானந்தர் சென்னையில் இருந்தபோது சில வைதிக வாதிகள் அவர் மீது வீசிய பழிச் சொற்களுக்கு அவர் மிகக் கடுமையாக மறுமொழி அளிக்கிறார். என்னைச் சூத்திரன் என்று சொல்லவும் சந்நியாசம் பெற எனக்குத் தகுதி இல்லை என்று முடிவு செய்யவும் இங்கே யாருக்குத் தகுதி இருக்கிறது? என்று மிகக் கடுமையாக அந்த வைதிக வாதிகளுக்கு மறுமொழி தருகிறார். அவருடைய சுயமரியாதை உணர்ச்சிதான் அவரை இப்படிச் சூடாக மறுமொழி தர வைத்திருக்கிறது. விவேகானந்தருக்குச் சூத்திரப் பட்டம் சூட்டிய உடனே அவருக்கு எவ்வளவு கோபம் வந்தது என்று பார்த்தீர்களா? எவ்வளவு கடுமையாக மறுமொழி தந்திருக்கிறார் என்று பார்த்தீர்களா? இதை நன்கு நினைவில் கொள்ளுங்கள். (காண்க - ஸ்ரீ ராமகிருஷ்ணா மடம் வெளியிட்டுள்ள 'எனது போர்முறை' என்ற கையடக்க நூல்).

இந்த நேரத்தில் நால்வருணப் பாகுபாடு பற்றிப் பலருக்கும் தெரியாத இன்றியமையாத செய்தி ஒன்றைக் குறிப்பிட வேண்டும். இன்றுங்கூட வடமாநிலங்களில் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய நான்கு வருணங்களும் உண்டு. ஆனால் தென் மாநிலங்களில் பிராமணர், சூத்திரர் ஆகிய இரண்டு பிரிவுகள் மட்டுமே உண்டு. அதாவது இங்கே உள்ள மக்களில் பார்ப்பனர் அல்லாதவர் எல்லோரும் சூத்திரரே. இதைப் பற்றி அறிஞர் ஆனைமுத்து அவர்கள் வழங்கும் செய்தி இங்கே பதிவு செய்யத் தக்கது.

"1860க்குப் பிறகு இன்று வரையில் உரிமையியல் சட்டங்களில் எண்ணற்ற மாற்றங்களும் திருத்தங்களும் செய்யப்பட்டுள்ளன. ஆயினும், இந்துச் சட்டத்தின் ஒரு பிரிவான தாயபாகச் சட்டம் நடைமுறையில் உள்ள வட

இந்திய மாநிலங்களில் இந்து மத நடப்பில் இன்றுங்கூட பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்கிற பிறவி அடிப்படையிலான நால்வருண வேறுபாடு கடைப்பிடிக்கப்படுகிறது.

"இந்துச் சட்டத்தின் இன்னொரு பிரிவான மிதாட்சாரச் சட்டம் நடப்பில் உள்ள எல்லாத் தென்னிந்திய மாநிலங்களிலும் பிராமணர், சூத்திரர் என்கிற வருண வேறுபாடு இன்றும் இந்து மத நடப்பில் முழுமையாக ஆதிக்கம் செலுத்துகிறது. இன்றும் தமிழ்நாட்டில் இந்து சமய சைவ, வைணவக் கோவில்களில் பார்ப்பனர் மட்டும் அர்ச்சகர் ஆக முடியும் என்றும் சமஸ்கிருதம் மட்டுமே கடவுள்களின் அர்ச்சனைக்கு உரிய மொழி என்றும் இருப்பது சாதியில் பிறவியில் உயர்வு தாழ்வு உண்டு என்கிற வருண வேறுபாட்டின் விளைவே யாகும்.

"இந்த ஏற்பாட்டுக்கு இந்திய அரசமைப்புச் சட்டத்தில் உள்ள விதிகள் 13, 17, 25, 372, 395 முதலானவற்றில் இன்றும் பாதுகாப்பு உள்ளது என்பது நாம் அறியத் தக்கது."

தென்னிந்திய மாநிலங்களில் உள்ள பார்ப்பனர் அல்லாதாரில் தம்மை மேல் சாதிக்காரராக நினைத்துக் கொண்டிருக்கும் எல்லோரும் சூத்திரர்கள் என்றே கருதப் படுகிறார்கள். நீதிமன்றத்தில்கூட அப்படிப்பட்ட தீர்ப்புகளே வழங்கப் பட்டிருப்பதாக அறிகிறோம். மிதாட்சாரச் சட்டம் இங்கே உள்ளவர்களுக்குச் சூத்திரப் பட்டம் கட்டிய போது விவேகானந்தருக்கு ஏற்பட்டதைப் போல ஒரு இயற்கையான சீற்றம் இங்கே உள்ள வெகுமக்களுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். சித்தர் சிவவாக்கியர், காளமேகப் புலவர், அத்திப் பாக்கம் வேங்கடாசல நாயகர், முனுசாமி நாயகர், பண்டிதர் அயோத்தி தாஸர், பெரியார் ஈ.வெ.ரா. முதலான மிகச் சிலருக்குத்தான் அந்தச் சீற்றம் ஏற்பட்டிருக்கிறது. அதன் விளைவாகத்தான் இன்று சுயமரியாதையைப் பற்றிப் பேசக்கூட நமக்கு வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இதை நாம் நன்றியோடு நினைத்துப் பார்க்க வேண்டும்.

தெலுங்குக்கும் தெலுங்கருக்கும் ஆந்திரத்தில் மரியாதை வேண்டும். மலையாளத்துக்கும் மலையாளிகளுக்கும் கேரளத்தில் மரியாதை வேண்டும். கன்னடத்துக்கும் கன்னடியருக்கும் கருநாடகத்தில் மரியாதை வேண்டும். அந்தந்த

மாநிலத்தில் அந்தந்த மாநில மொழிக்கும் மாநில மக்களுக்கும் மரியாதை வேண்டும். அதேபோலத்தான் தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் தமிழ் மண்ணில் மரியாதை வேண்டும். இந்த நினைப்பும் எதிர்பார்ப்பும் இயற்கையானது, இயல்பானது. இந்த இயல்பு நிலை மாறினால், இந்த இயற்கைக்குக் கேடு நேர்ந்தால் அங்கே மக்கள் அடிமைத் தனத்திலிருந்து விடுபட வில்லை என்றுதானே பொருள்? உன்னை இழிந்தவனாக நினைக்கும் ஒருவனை நீ போற்றிப் புகழ்ந்து துதி பாடுவது அடிமைத்தனமா, பரந்தமனப்பான்மையா? உன் மொழியைத் தீண்டத் தகாத மொழியாக ஆக்கிப் புறத்தே நிறுத்தும் இன்னொரு மொழியை நீ போற்றிப் புகழ்ந்து தலைமேல் தூக்கிக் கொண்டாடுவது அடிமைத்தனமா, விரிந்த மனப் பான்மையா? மனிதனுக்குச் சுயமரியாதை வேண்டும். இன்னொரு மனிதனுக்கு உள்ள சுயமரியாதையை மதிக்கத் தெரிய வேண்டும். சர். சி. பி. இராமசாமி ஐயர் 1926-இல் நாடார் மகாநாட்டில் தலைமை வகித்துப் பேசும் போது என்ன சொல்லியிருக்கிறார் பாருங்கள்;

"இராஜரீகத்திலும் வியாபார விவகாரங்களிலும் அய்ரோப்பியர்கள் நமக்கு மேலானவர்கள் போல நடக்க விடக் கூடாது என்றும் சமத்துவமாகவே நடக்கச் செய்யவேண்டும் என்றும் இந்தியர்களாகிய நாம் கூறி வருகின்றோம். ... ... அப்படி இருக்கும்போது அதுபோலவே தற்செயலாகவோ துரதிர்ஷ்ட வசமாகவோ நம்மில் தாழ்ந்தவர்களாகக் கருதப் பட்டவர்கள் உயர்ந்த வகுப்பார்களுடன் போராடி, தாங்களும் அவர்களுக்குச் சமமானவர்கள் என்பதை நிலைநாட்ட முயற்சி செய்கிறார்கள். இந்தப் போராட்டம் கட்டாயம் நடக்க வேண்டியதுதான். இது மிகவும் அவசியமானதும் ஆகும். சமூக சமத்துவங்களுக்கு இந் நிலை இன்றியமையாதது என்பதைத் தீர்க்க திருஷ்டி உடையவர்கள் உணர்ந்தே தீருவார்கள்." (குடி அரசு 19-12-1926 பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1, பக்கம். 453).

இப்படிப்பட்ட வெளிப்படையான பேச்சைப் பெரியார் வரவேற்று மேற்கோள் காட்டுகிறார். நாமும் அதை உளமார வரவேற்கிறோம். இந்தத் தெளிவோடு சுயமரியாதை வெளிச்சங்களை நாம் பார்க்க வேண்டும். சுயமரியாதை எழுச்சி எங்கே தோன்றினாலும் அதை வரவேற்கின்ற தெளிவும் நாணயமும் உள்ள மனிதர்களை நாம் போற்றிப் பாராட்ட

வேண்டும். சுயமரியாதை உணர்ச்சி என்பது சுயநல உணர்ச்சி யல்ல, மனித மதிப்பைப் பாதுகாக்கிற உணர்ச்சி, மக்கள் நேயத்தை வளர்க்கிற உணர்ச்சி. இந்த உணர்ச்சி இன்று நமக்கு மிகவும் தேவையாக இருக்கிறது. சுயமரியாதை உணர்ச்சி வெள்ளம் இளைய சமுதாயத்திடம் கங்கு கரையின்றிப் பெருக வேண்டும். சுயமரியாதை உணர்ச்சி மனிதனுக்கு உயிர்போன்றது, உயிரைவிட மேலானது என்று கூடச் சொல்ல வேண்டும்.

தனிமனிதச் சுயமரியாதை உணர்ச்சி படிப்படியாக எல்லா உள்ளங்களிலும் விரிவுபெற்று மொழிவழிச் சுயமரியாதை உணர்ச்சியாக, இனவழிச் சுயமரியாதை உணர்ச்சியாக, நாட்டுவழிச் சுயமரியாதை உணர்ச்சியாக, பண்பாட்டு வழிச் சுயமரியாதை உணர்ச்சியாக மலர வேண்டும்.

10-11-1952-இல் முசிறியில் ஒரு உயர்நிலைப் பள்ளியில் நடந்த ஒரு நிகழ்ச்சி பண்பாட்டுவழி இன வழிச் சுயமரியாதை நோக்கில் இங்கே குறிப்பிடத் தக்கது. இறைவணக்கத்தின் போது வாழிய செந்தமிழ் என்று தொடங்கும் பாடலும் பாடப் பட்டிருக்கிறது.

பாரதியார் பாடிய அந்தப் பாடலில் 'ஆரிய நாட்டினர் ஆண்மையோ டியற்றும் சீரிய நன்மைகள் சிறந்து மிக் கோங்குக' என்ற அடியும் வருகிறது. இந்த அடியைப் பாடத் தொடங்கிய உடனே 'பாடாதே, நிறுத்து' என்று அங்கே இருந்த தமிழாசிரியர் ஆணை இடுகிறார். அப்படி ஆணை இட்டவர் தண்டனை பெறுகிறார். நீதிமன்ற ஆணையின் மூலம் மீண்டும் பணியில் சேர்ந்து முறைப்படி ஓய்வு பெற்றார். அந்தத் தமிழாசிரியர்தான் தமிழ்மறவர் வை. பொன்னம்பலனார். அவரை அப்படிச் செயல்பட வைத்தது அவரிடமிருந்த மொழிவழி, இனவழிச் சுயமரியாதை உணர்ச்சிதான் என்பதைத் தமிழகம் இப்போது நன்கு உணர்ந்து கொண்டுள்ளது.

தமிழைப் பற்றி, தமிழ் இனத்தைப் பற்றி, தமிழ்ப் பண்பாட்டைப் பற்றி யார் என்ன சொன்னாலும் நமக்கென்ன என்று தமிழன் ஊமையாய்ச் செவிடாய் மாறி விட்டால் தமிழ் நாட்டில் உதிரிகள்தான் இருப்பார்கள் - வரலாறு போற்றும் தமிழர்கள் இருக்கமாட்டார்கள்.

சுயமரியாதை உணர்ச்சி என்பது எல்லா மொழியினர்க்கும் உரியது, எல்லாக் கட்சியினர்க்கும் உரியது, எல்லா மதத்தினர்க்கும் உரியது, எல்லா நாட்டினர்க்கும் உரியது. இது மனிதனின் பிறப்புரிமை.

அறிவும் மானமும் ஒழுக்கமும் உள்ள ஒவ்வொரு மனிதனும் சுயமரியாதை உணர்ச்சி உள்ளவனாக இருக்க வேண்டும். தன்னுடைய சுயமரியாதையைப் போற்றுவது போல் ஒவ்வொரு சுயமரியாதைக் காரனும் மற்றவருடைய சுயமரியாதையையும் போற்ற வேண்டும்.

இந்தப் பண்பாடு குறைந்தால் அடிமைத்தனம் நீங்காது. சமுதாயத்தில் சம உரிமையோ சம வாய்ப்போ ஏற்படாது. சுயமரியாதைப் பண்பாட்டைக் காக்கவும் வளர்த்தெடுக்கவும் நாம் ஒவ்வொருவரும் உறுதி பூண வேண்டும்.

# 5: மக்கள்மீது ஏற்றப்பட்ட இழிவுச் சுமை

'மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.' - திருக்குறள்

ஆங்காங்குத் தமிழக வரலாற்றில் தென்பட்ட சுயமரியாதை வெளிச்சங்களை ஓரளவுக்கு முன்னைய பகுதியில் சுட்டிக் காட்டினோம். மக்கள் மீது ஏற்றப் பட்ட இழிவுச் சுமைகளைப் பற்றித் தெரிந்து கொண்டால்தான் சுயமரியாதை வெளிச்சங்களின் அருமை நமக்குப் புரியும்.

செய்ந்நன்றி கொன்றவனை இழிந்தவன் என்றால் நமக்குப் புரிகிறது. தான் சொன்ன சொல்லை ஒருவன் காப்பாற்றாமற் போனால் அவனை இழிந்தவனாகக் கருதுகிறோம். அது நமக்குப் புரிகிறது. விருந்துகண் டொளிக்கும் திருந்தா வாழ்க்கை இழிவானது என்றால் அது நமக்கு விளங்குகிறது. பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச் செய்யா கூறிக் கிளத்தல் (புறம் 148) மிகவும் இழிவானது என்றால் அது நமக்கு விளங்குகிறது. பொருந்திய கேண்மையின் மறையுணர்ந் தம்மறை பிரிந்தக்கால் பிறர்க்குரைத்தல் (கலி. 25) பீடில்லாச் செய்கை என்றால் அது நமக்குத் தெளிவாக விளங்குகிறது.

இவன் இன்ன ஆணுக்கும் இன்ன பெண்ணுக்கும் பிறந்ததனால் இழிந்தவன். இந்த இழிவு கல்வியாலோ செல்வத்தாலோ உழைப்பாலோ ஒழுக்கத்தாலோ பண்பாலோ மாறிவிடாது. அவன் இன்ன ஆணுக்கும் இன்ன பெண்ணுக்கும் பிறந்ததனால் உயர்ந்தவன். அவனுடைய உயர்வு அவன் இழிந்த காரியங்களைச் செய்தாலும் அவனை விட்டு நீங்காது. நெருப்பின் மீது தூசுகளும் மாசுகளும் ஒட்டாது அல்லவா? அது போல இழிசெயலின் விளைவுகள் அவனைச் சேர்வதில்லை. இப்படிச் சாத்திரங்கள் சொல்லுகின்றன என்றால் அது நமக்கு விளங்க வில்லை.

குறிப்பிட்ட ஆணுக்கும் குறிப்பிட்ட பெண்ணுக்கும் ஒருவன் பிறந்திருக்கிறான் என்றால் அது அவன் குற்றம்

அல்லவே. அவனை இழிந்தவன் என்று எப்படிச் சொல்லலாம்? அவன் மீது எப்படி இழிவைச் சுமத்தலாம்? இது நமக்கு விளங்க வில்லையே. பிறந்த உடனேயே ஒரு குழந்தை உயர்ந்தது என்றும் இன்னொரு குழந்தை இழிந்தது என்றும் கூறி உயர்வு தாழ்வைக் குழந்தை மேல் ஏற்றுவது முறையா? இப்படித்தான் வருணக் கருத்து மக்கள் மீது சுமத்தப் பட்டிருக்கிறது. ஒரு குழந்தை பிராமணன் ஆவதற்கும் இன்னொரு குழந்தை சூத்திரன் ஆவதற்கும் அந்தக் குழந்தை பொறுப்பல்ல. அந்தக் குழந்தை விரும்பி அப்படிப் பிறக்க வில்லை. பிறப்பு வழி உயர்வு தாழ்வு அந்தக் குழந்தை மீது சுமத்தப் பட்டிருக்கிறது. இழிந்த பிறப்பு என்று கருதப்படும் குழந்தை வாழ்நாள் முழுதும் அந்த இழிவைச் சுமந்தே தீர வேண்டும். இது மிகப் பெரிய மோசடியா இல்லையா?

அறிவுக்குப் பொருந்தாத இந்த வருணப் பகுப்பு பழந்தமிழகத்தில் முழு அளவுக்குச் செல்வாக்குப் பெறவில்லை யென்றாலும் அப்போதே இது இங்கே தலைகாட்டத் தொடங்கி விட்டது. "வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும் கீழ்ப்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே" என்று ஒரு அரசன் பாடுகின்றான். நால்வருணக் கருத்தும் உயர்வு தாழ்வுக் கருத்தும் இங்கே சங்க காலத்திலேயே தலைகாட்டத் தொடங்கி விட்டது என்பதை இந்தப் பாடல் அடிகள் நமக்கு உணர்த்துகின்றன.

செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடிய கபிலர் "பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே" என்று பாடுகிறார். பார்ப்பனரின் உயர்வை இந்தப் பாடல் நிலைநிறுத்த முயலுகிறது. மாங்குடி மருதன், மோசி கீரன் போன்ற தலைமைப் புலவர்களுக்கு அரசர்களிடம் இருந்த செல்வாக்கிற்கு நிகராக அல்லது மேலாகச் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் பார்ப்பனர்க்குச் செல்வாக்கு ஏற்பட்டிருந்ததாகத் தோன்றுகிறது. சங்கத்தமிழ் மன்னர்களின் சுயமரியாதைக்கு இது அழகாக இல்லை என்பதைப் பள்ளிப் பருவப் பிள்ளைகளும் புரிந்து கொள்ளும்.

'மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க் காகிய காலமும் உண்டே'

என்ற நூற்பாவின் மூலம் நால்வருணப் பாகுபாட்டிற்கும் உயர்வு தாழ்வுக் கருத்துக்கும் தொல்காப்பியமே முன்வந்து சான் று பகர்வதாகத் தோன்றுகிறது.

கி பி ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஐயனாரிதனார் என்ற சேரர் குலத் தோன்றல் தாம் இயற்றிய புறப்பொருள் வெண்பா மாலையில் வேளாண் வாகைக்கு இலக்கணம் எழுதும் போது

'மேல் மூவரும் மனம்புகல
வாய்மையான் வழி ஒழுகின்று'

என்று எழுதுகிறார். வருணக் கருத்தும் வருண உயர்வு தாழ்வுக் கருத்தும் அப்போதே கால் கொண்டு விட்டன என்பதை இந்த நூற்பா உறுதிப் படுத்துகிறது. வருணப் பகுப்பும் வருண உயர்வு தாழ்வும் ஏற்றுக்கொள்ளப் பட்டு விட்டால் மனித சமத்துவம் மறுக்கப்படுகிறது என்று பொருள். வருணப் பகுப்புக் கோட்பாடு 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற வாழ்வியல் தத்துவத்திற்கு முரணானது.

வருணப் பகுப்புச் செல்வாக்கு ஏறுமுகமாகவே வளர்ந்து இலக்கணங்களில் எழுத்துகளுக்கும் பாக்களுக்குங்கூட வருணப் பகுப்பு பேசுகிற அளவுக்கு உச்சத்துக்குப் போய்விட்டது. வருணப் பகுப்புக்கு வந்த இந்த வல்லாண்மை வாழ்வு மனித சமத்துவத்துக்கோ சுயமரியாதைக்கோ உகந்ததாக இல்லை.

தொல்காப்பியத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையில் ஒரு பகுதி இங்கே சுட்டிக் காட்டிப் பேசத்தக்கதாக அமைகிறது.

கற்பியலில் கரணத்தின் அமைந்து முடிந்த காலை எனத் தொடங்கும் நூற்பாவுக்கு உரை எழுதும்போது,

*அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருளின் கண்ணும்; வரைந்த காலத்து மூன்று நாள் கூட்டமின்மைக்குக் காரணம் என்னென்று தலைவி மனத்து நிகழா நின்ற வருத்தம் தீரும்படி மிக்க வேட்கையோடு கூடி யிருந்து வேதஞ் சொல்லுதலுற்ற பொருளின்கண்ணும்; தலைவன் விரித்து விளங்கக் கூறும்.*

"அது 'முதல் நாள் தண்கதிர்ச் செல்வற்கும் இடைநாள் கந்தருவர்க்கும் பின்னாள் அங்கியங் கடவுட்கும் அளித்து நான்காம் நாள் அங்கியங் கடவுள் எனக்கு நின்னை அளிப்ப யான் நுகர வேண்டிற்று. அங்ஙனம் வேதம் கூறுதலான்' எனத் தலைவிக்கு விளங்கக் கூறுதல். உதாரணம் இக்காலத்தின்று."

உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் வழங்கியுள்ள இந்த விளக்கம் எந்தவகையிலும் பொருத்தப்பாடு உள்ளதாகத் தோன்ற வில்லை என்பதோடு தமிழ்ப் பண்பாட்டுக்கும் தமிழ் மரபுக்கும் எதிரானதாகவும் இருக்கிறது. இப்படிப்பட்ட விளக்கங்கள் சுயமரியாதை வெளிச்சத்தை மறைத்து நின்ற திரைகள் என்றே சொல்ல வேண்டும்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்

என்ற திருக்குறளுக்கு உரை எழுதும்போது கேட்ட தாய் என்ற தொடருக்குப் 'பெண்ணியல்பால் தானாக அறியாமையின் கேட்ட தாய்' என்று வள்ளுவர் கூறினார் என்று பரிமேலழகர் தந்திருக்கும் விளக்கம் பெண்கள்மேல் இழிவைச் சுமத்துகிற மனப்பான்மை அவர் காலத்திலேயே அரும்பி விட்டது என்ற உண்மையை நமக்கு உணர்த்துகிறது.

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை

என்ற குறளுக்கு விளக்கம் எழுதும்போது பரிமேலழகர் இயல்புடைய மூவர் என்ற தொடருக்கு வழங்கியுள்ள விளக்கம் நம் கவனத்தை ஈர்ப்பதாக உள்ளது. இயல்புடைய மூவர்க்கும் என்பதற்கு அற இயல்பினை உடைய ஏனை மூவர்க்கும் என்று பொருள் கூறிய பரிமேலழகர் 'ஏனை மூவராவார் - ஆச்சாரியனிடத்தினின்று ஓதுதலும் விரதங் காத்தலும் ஆகிய பிரமசரிய ஒழுக்கத்தானும், இல்லை விட்டு வனத்தின்கண் தீயொடு சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக்கத்தானும், முற்றத் துறந்த யோக ஒழுக்கத்தானும் என இவர்' என்று ஒரு விளக்கத்தை வழங்குகிறார். இதனைத் தொடர்ந்து, 'இவருள் முன்னை இருவரையும் பிறர் மதம் மேற்கொண்டு கூறினார்' என்று ஒரு நுட்பமான குறிப்பையும் தந்துள்ளார். இதிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளும் செய்திகள் என்னென்ன?

1. பிரமசரிய ஒழுக்கம், வனத்தின்கண் மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் வானப்பிரஸ்த ஒழுக்கம், முற்றத் துறந்த யோக ஒழுக்கம் ஆகிய இம்மூன்றும் வருணாஸ்ரம தர்மத்தில் குறிக்கப் பட்டுள்ள பிரமச்சரியம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் ஆகிய மூன்றுமேயாம். வருணக் கோட்பாடு அறிமுகமான போதே ஆஸ்ரமக் கோட்பாடும் அறிமுகமாகி யிருக்கக் கூடும். கிருகஸ்தனாக இருப்பவன் பிரமசரியன், வானப்பிரஸ்தன், சன்னியாசி ஆகிய மூவருக்கும் துணையாக இருக்க வேண்டியவன் என்பது பரிமேலழகர் இங்கே வழங்கி யுள்ள கருத்து. வருணாஸ்ரம தர்மக் கோட்பாட்டை நிலைப்படுத்த இங்கே ஒரு முயற்சி மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

2. முன்னை இருவரையும் பிறர் மதம் மேற்கொண்டு கூறினார் என்று அவர் தரும் குறிப்பில் நால்வகை ஒழுக்கம் என்பது பிறர் மதம் என்பதும் தமிழ் மரபுக்கு உரிய மதம் வேறு என்பதும் புலனாகிறது. தமிழ் மரபு ஏற்றுக் கொண்டது இல்லறம், துறவறம் ஆகிய இருவகை ஒழுக்கமே. பிரமசரியம், வானப்பிரஸ்தம் ஆகிய இரண்டும் பிறர் மதத்திற்கு உரியன. அதாவது தமிழர் வாழ்வியலில் இல்லறம் துறவறம் ஆகிய இருவகை ஒழுக்கங்கள் மட்டுமே உண்டு. வைதிக வாழ்வியலில் பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் ஆகிய நால்வகை ஒழுக்கங்கள் உள்ளன. தமிழர் வாழ்வியல் நெறியில் வருணாஸ்ரம தர்மம் இடம்பெறாத காலம் இருந்தது. அது ஏதோ ஒரு காலத்தில் பின்னால் இங்கே புகுத்தப் பட்டிருக்கிறது.

தமிழரின் இயற்கைநெறி வாழ்வை மீட்டுருவாக்கம் செய்து கண்டறிய இன்று நமக்குப் பெரிதும் உதவியாக இருப்பது சங்க இலக்கியங்கள். அதற்கு அடுத்த நிலையில் உதவியாக இருப்பது பழமொழி, புதிர், விடுகதை, வாய்மொழிக் கதைகள், நாட்டுப்புறப் பாடல்கள், கதைப் பாடல்கள் முதலானவற்றை உள்ளடக்கிய நாட்டுப்புறவியல். இந்த நோக்கில் நாட்டுப்புறவியல் தனியே விரிவாக ஆராயத்தக்கது.

வைதிக நெறி தமிழர் வாழ்வில் உள்ளே நுழைந்த பிறகு இயற்கை நெறி சீர்குலைந்து உருக்குலைந்து போயிருக்கிறது. இந்தச் சீர்குலைவும் உருக்குலைவும் அரசர்கள் ஆதரவோடு

நடந்திருக்கிறது. வருணாச்சிரம தருமத்தை முதுகெலும்பாகக் கொண்ட வைதிக நெறி சுயமரியாதைக்கும் மனித சமத்துவத்துக்கும் எதிராக நின்று தொடர்ந்து ஏறுமுகமாகவே வளர்ந்திருக்கிறது.

இன்றுங்கூடத் தமிழையும் தமிழ் மக்களையும் இழிவு படுத்துகிற மேடையில் தனக்கு மாலையும் மரியாதையும் கிடைக்கும் என்றால் அதனால் நமக்கென்ன என்று அதைச் சகித்துக் கொண்டு மாலை மரியாதைகளை மகிழ்ச்சியாக ஏற்றுக் கொள்ளுகின்ற தமிழர்கள் இருக்கிறார்களே. அச்சத்தாலும் அறியாமையாலும் ஆசையினாலும் இழிவைச் சுமந்து சுமந்து பழகிப் போன நமக்கு இழிவைச் சுட்டிக் காட்டும் போதாவது சுயமரியாதை உணர்ச்சி பீறிட்டு வெளிப்பட வேண்டும்.

தமிழை நீச பாஷையாக நடத்தியபோது நாம் சகித்துக் கொண்டோம். தமிழும் தமிழனும் கோயில் கருவறைக்குள் நுழைய முடிய வில்லை. கோயில் கருவறைக்குள் இன்னும் தீண்டாமை நடைமுறையில் இருக்கிறது என்பதைத்தானே இது காட்டுகிறது?

தமிழைக் கல்விமொழியாக்குகிற அளவுக்கு இன்னும் நமக்குச் சுயமரியாதை தலைகிளம்ப வில்லை. எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்று நாம் சொன்னோமே தவிரச் சொன்னதைச் செய்கிற வினையாண்மை இன்னும் நம்மிடம் விளைய வில்லை.

அண்மைக்காலத்தில் வாழ்ந்து மறைந்த தமிழ்ப் பேராசிரியர் காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியாருக்கு அப்போதைய சம்பளம் எண்பது ரூபாய்; ஆனால் வடமொழிப் பேராசிரியர் குப்புசாமி சாஸ்திரியாருக்கு அப்போதைய சம்பளம் முந்நூறு ரூபாய்க்கு மேல். இது தமிழுக்கு இழிவு இல்லையா? அப்போதைய முதல்வர் பனகல் அரசர் பெரியார் எழுதிய ஒரு தலையங்கத்தின் பேரில் இந்த இழிவைத் துடைத்தார்.

இசையிலும் நாடகத்திலும் திரைப்படத்திலும் பேரும் புகழும் பெற்ற அம்மையார் கே. பி. சுந்தராம்பாள் அவர்கள்

காங்கிரசு இயக்கத்துக்கு நெருக்கமாக இருந்தவர். அந்த நெருக்கத்தால் சுயமரியாதை இயக்கத்தை வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் தாக்கியவர். அவர் மேல் சாதி என்று கருதப்படும் உயர்வகுப்பில் பிறக்கவில்லை. அவருக்குப் புகழும் பொருளும் பெருகிய உடனே சாதியைக் குறிப்பிட்டு அவரை இழிவு படுத்தத் தொடங்கி விட்டார்கள். சரியான சுயமரியாதைக்காரர் எதிரியின் சுயமரியாதையையும் காப்பாற்ற முன் நிற்பார் என்பதை உறுதிப் படுத்துவதுபோல் பெரியார்தான் அந்த அம்மையாருக்கு அப்போது ஆதரவுக் குரல் கொடுக்கிறார் (*காண்க குடி அரசு 4-8-1935, எஸ் வி ராஜதுரை, வ கீதா ஆகியோரின் பெரியார் - சுயமரியாதை சமதர்மம்*).

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியில் சுயமரியாதை என்ற சொல் இடம் பெற வில்லை என்று முன்பே குறிப்பிட்டிருந்தேன். அந்தப் பேரகராதியை உருவாக்கிய பேராசிரியர் எஸ். வையாபுரி பிள்ளை அவர்கள் அரும்பாடு பட்டு அந்தப் பணியை நிறைவேற்றியவர். அந்தப் பணி நிறைவைக் கொண்டாட ஏற்பாடு செய்யப் பட்ட விழாவில் பேராசிரியர் வையாபுரி பிள்ளை இருட்டடிப்பு செய்யப்பட்டார். செய்தி வெளியிட்ட இதழ்களும் அப்படியே செய்தன. இது பேராசிரியருக்கு இழைக்கப்பட்ட அவமரியாதை. அப்போது சுயமரியாதை இயக்கந்தான் இந்த இருட்டடிப்பைக் கண்டித்து எழுதியது, (*குடி அரசு 29-3-1936, விளக்கங்களுக்குக் காண்க எஸ். வி. ராஜதுரை, வ. கீதா ஆகியோரின் பெரியார் சுயமரியாதை சமதர்மம்*).

*15-7-1955*-இல் ஒரு மாவட்டத் தலைவர் போட்ட உத்தரவை ரத்து செய்து தீர்ப்பு சொல்ல வந்த ஒரு நீதிபதி,

**It is for the Government to consider and consider seriously whether an officer of such totalitarian views and disregard of law should continue to be entrusted with the duties of maintaining law and order in any locality in this state** என்று தீர்ப்பு எழுதுகிறார். இதைக் கண்டு பெரியாருக்கு மனம் கொதிக்கிறது. *4-11-1956*-இல் திருச்சியில் பொதுக்கூட்டத்தில் பெரியார் இது பற்றிப் பேசிய பேச்சு நீதிமன்றத்தின் கவுரவத்தைப் பாதித்திருப்பதாகப்

பெரியார் மீது குற்றம் சாட்டப் படுகிறது. மாவட்டத் தலைவர் போட்ட உத்தரவு சரியில்லை யென்றால் அந்த உத்தரவைத் தாராளமாக ரத்து செய்யட்டும். உத்தரவை ரத்து செய்கிற போக்கில் வேறு வகையான உள்நோக்கத்தோடு அந்தத் தீர்ப்பு எழுதப் பட்டிருக்கிறது என்பதைப் பெரியார் அப்போது வெட்ட வெளிச்சமாக்கினார்.

ஒரு மாவட்டத் தலைவரின் சுயமரியாதைக்கு ஆபத்து வந்தபோது விளைவுகளைப் பற்றிக் கவலைப் படாமல் மாவட்டத் தலைவர் ஆர். எஸ். மலையப்பன் அவர்களுக்குப் பெரியார் ஆதரவுக் குரல் கொடுக்கிறார். (விளக்கங்களுக்குக் காண்க ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம் 270-280) நீதிமன்ற அவமதிப்புக் குற்றத்துக்காகப் பெரியார் ஆறு மாதம் சிறைத் தண்டனை பெற்றார் (காண்க அறிஞர் வே. ஆனைமுத்துவின் 'பெரியாரியல்', தொகுதி 1, பக்கம். 105).

மறைமலை அடிகளாரின் 'அறிவுரைக் கொத்து' 1935 வாக்கில் அப்போதைய இண்டர்மீடியட் படிப்புக்குப் பாடமாக இருந்தது. அந்த நூல் பாட நூலாக நீடிக்கக் கூடாது என்று ஒரு கூட்டத்தார் அந்த நூலைப் பாடத்திட்டத்திலிருந்து நீக்கிவிட முயன்ற போது சுயமரியாதை இயக்கந்தான் முனைப்பாக முன் நின்று அந்த நூலைப் பாடநூலாக நீடிக்கச் செய்தது. அடிகளாரின் சுயமரியாதையைச் சுயமரியாதை இயக்கந்தான் அக்கறையோடு காப்பாற்றியது.

திருச்சிராப்பள்ளியில் உள்ள பாரதிதாசன் பல்கலைக் கழகம் சில ஆண்டுகளுக்கு முன் 'தமிழியக்கம்' என்ற நூலைப் பாடமாக வைத்திருந்தது. தமிழியக்கம் என்பது பாவேந்தர் பாரதிதாசன் இயற்றிய ஒரு சிறந்த கருத்து விளக்க நூல். இந்த நூலுக்கு அங்கே ஏதோ ஒரு மூலையில் ஒரு எதிர்ப்பு எழுந்திருக்கிறது. அந்த நூல் பாடத்திலிருந்து நீக்கப் பட்டு விட்டது. பாரதிதாசன் பெயரால் அமைந்த ஒரு பல்கலைக் கழகத்தில் அவருடைய நூலொன்று பாடமாக வைக்கப்பட்டு இனந்தெரியாத எதிர்ப்புக் கிடையே பாடப் பகுதியிலிருந்து நீக்கப் பட்டு விட்டது என்றால் இது அவருக்கு இழைக்கப்பட்ட அவமரியாதைதானே? இதை நினைக்கும் போதே நமக்குத் துன்பமாக இல்லையா? பெரியார் மறைந்த

பிறகு இந்தப் பேரிடர் நிகழ்ந்திருக்கிறது. எல்லைக்குட்பட்டுக் குரல் கொடுத்துப் பார்த்தோம். பயனில்லை.

பிள்ளைகளுக்குப் பெயர் வைப்பதில் கூட ஒரு புதிய எழுச்சியும் விழிப்புணர்ச்சியும் ஏற்பட்டுக் கடந்த ஒரு நூற்றாண்டுக் காலமாக நல்ல தமிழ்ப் பெயர்கள் சூட்டப்பட்டன.

வைதிகப் பூச்சினால். உருமாறிய ஊர்ப்பெயர்கள் பல இடங்களில் மீண்டும் பழந்தமிழ் வடிவங்களைப் பெற்றன. இப்படிச் சுய அடையாளங்கள் காக்கப்பட்டும் மீட்கப் பட்டும் வரும் சூழலில் இன்னொரு பக்கம் திட்டமிட்டு இதற்கு எதிரான வேலைகளிலும் ஈடுபட்டு மகிழ்ச்சி அடைகிறார்கள்.

மணிப்பிரவாளமும் வடமொழி மேலாதிக்கமும் மீண்டும் வேறு வேறு போர்வையில் துளிர்ப்பது ஒரு வகையான ஆக்கிரமிப்புக்கும் அபகரிப்புக்கும் அடையாளம். தமிழை இன்றுங்கூட இளப்பமாகப் பார்க்கும் சில வக்கிரப் பிறவிகள் வேண்டுமென்றே தேவையில்லாத இடங்களில் ஜ, ஸ, ஷ, ஹ ஸ்ரீ, க்ஷ ஆகிய ஒலிகளைத் தமிழில் இடையிடையே கலந்து எதையோ சாதித்து விட்டது போல உள்ளூர உவந்து புன்முறுவல் பூக்கிறார்கள். இதனால் தமிழின் தலையில் ஒரு குட்டு வைத்ததாக எண்ணி இறுமாந்து பூரிக்கிறார்கள்.

நம்மை வாழவைக்கும் மொழிச்சூழலுக்கும் மொழி மரபுக்கும் வேண்டு மென்றே இடையூறாகவும் எதிராகவும் செயல்படுவது நன்றியற்ற செயல் என்பதும் பொது அமைதியைக் கெடுக்கும் குறும்பு என்பதும் கொஞ்சம் எண்ணிப் பார்த்தால் கூட யாருக்கும் புரியும். சுய அடையாளங்களை மீட்கவும் சுய அடையாளங்களைக் காக்கவும் கடந்த காலத்தில் பெரியார், வ உ சிதம்பரம்பிள்ளை, திரு. வி. கலியாணசுந்தர முதலியார், உமாமகேஸ்வரம் பிள்ளை, கா. சுப்பிரமணிய பிள்ளை, மறைமலை அடிகளார், நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனார், மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் முதலான பெருமக்கள் எவ்வளவு பாடுபட்டார்கள், எவ்வளவு இடையூறுகளை

எதிர்கொண்டார்கள் என்பதைப் பற்றியெல்லாம் இளைய தலைமுறையினர் தெரிந்து கொள்ளவேண்டும்.

கடந்த நூற்றாண்டில் இங்கு நடந்த சுயமரியாதை இயக்கப் பணிகளின் அருமை பெருமைகளை இளைய சமுதாயம் அறியாமல் இருக்கலாம். ஆனால் இப்போது அறிந்து கொள்ள வேண்டும். நம் வளர்ச்சிக்கு அந்த அறிவு பெரிதும் தேவையானது.

பல்வேறு வகையில் இப்போதும் தமிழ்ச் சமுதாயம் இழிவைச் சுமந்து கொண்டுதான் வாழ்கிறது. இதை உணர்ந்தவர்களுக்குத்தான் சுமை தெரியும். அறியாமையால், சொரணையற்ற தன்மையால், அடிமைத் தனத்தால் இதை உணராமல் இருப்பதால் இழிவு நீங்கி விடாது. நம் மீது உள்ள இழிவை நாம் துடைத்தாக வேண்டும். சுயமரியாதை உணர்ச்சிதான் நம்மைச் சரியான வழியில் செலுத்தும்.

"தமிழரின் மேன்மையை இகழ்ந்தவ னையென்
தாய்தடுத் தாலும் விடேன்
எமைநத்து வாயென எதிரிகள் கோடி
இட்டழைத் தாலும் தொடேன்"

என்ற பாவேந்தர் பாடலில் காணும் உணர்ச்சி இளைய சமுதாயத்தின் நாடி நரம்புகளில் குருதியி லெல்லாம் பரவ வேண்டும்.

தன்மானம், சாதி மானம், குடும்ப மானம் என்று மக்கள் வழக்கில் சொல்லுவார்கள். மானம், ரோஷம், சூடு, சொரணை என்றெல்லாம் மக்கள் வழக்கில் உள்ள சொல்லும் பொருளும் மறைந்துவிடக் கூடாது. ஒவ்வொரு மனிதனுக்கும் தன்மானத்தின் மீதும் இனமானத்தின் மீதும் மொழி மானத்தின் மீதும் எழுப்பப்பட்ட முழுமையான சுயமரியாதை உணர்ச்சி வேண்டும். அப்படிப்பட்ட சுயமரியாதைதான் மனித ஆளுமையை முழுமைப் படுத்தும். அந்த ஆளுமைதான் வாழ்க்கையில் எதையும் பாராட்டத் தக்க வகையில் எதிர்கொள்ளும் திறனையும் அறிவையும் துணிவையும் கொடுக்கும்.

# 6. சுயமரியாதை இயக்கம்

*"நாம் அவர்களுடன் பேசும்போது வாயைப் பொத்திக் கொள்ள வேண்டும். (ஏனென்றால் வாயிலிருந்து வெளிவரும் காற்று அவர்கள் மீது பட்டுத் தீட்டாகிவிடுமாம்).*

*இம்மாதிரியான ஆயிரக் கணக்கான உதாரணங்களைக் காணலாம். இந் நிலையில் நம் எதிரிகள் நம்மை வகுப்புத் துவேஷிகள் என்றோ நாத்திகர்கள் என்றோ சொல்லுவார்களோ எனப் பயந்து, நமது ஜீவாதாரமான உரிமைகளைஅறியச் செய்ய வேண்டிய கடமைகளிலிருந்து கொஞ்சமும் பின்வாங்கிக் கொள்ளக் கூடாது." (குடிஅரசு, 19-12-1926 பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 456).*

சமுதாயத்தில் நிலவிய சாதி உயர்வு தாழ்வு உணர்ச்சி பலரையும் பல நேரங்களில் பல்வேறு வகையில் பாதிப்புக்கு உள்ளாக்கி யிருக்கின்றன. இது இப்படித்தான் இருக்கும், இது இங்கே வழக்கம், இது எங்கள் பழக்கம் என்றெல்லாம் சொல்லிப் பலர் உயர்வு தாழ்வு உணர்ச்சியால் விளைந்த அவமரியாதைகளையும் கொடுமைகளையும் சகித்துக் கொண்டு வாழ்ந்து விட்டனர். மான மறவர்கள் சிலர் அவ்வப்போது தனிமனித எதிர்ப்புகளைக் காட்டியிருக்கின்றனர். சிலரால் அவ்வப்போது சில பொறிகள் பறந்திருக்கின்றன. சிலர் தங்கள் சுயமரியாதைச் சிந்தனைகளை நூல்களிலும் செய்தி ஏடுகளிலும் சமுதாயப் பணிகளிலும் விதைத்து விட்டுச் சென்றிருக்கின்றனர். நமக்குத் தெரிந்தவரை மனித சமுதாய வரலாற்றில் பெரியார் ஈ.வெ. இராமசாமி அவர்கள்தான் சுயமரியாதையை ஒரு வாழ்வியல் கொள்கையாக்கி அதற்காக ஒரு இயக்கத்தையே உருவாக்கி யிருக்கிறார்.

1922-இல் பெரியார் கோவை சிறையில் இருந்தபோது அவரோடு சிறையில் இருந்த திரு தங்கபெருமாள் பிள்ளை அவர்களோடு கலந்து பேசிக் 'குடிஅரசு' என்ற பெயரில் பெரியார் ஒரு பத்திரிகையைத் தொடங்க நினைத்திருக்கிறார். நமது நாட்டு மக்களுக்குள் சுயமரியாதையையும்

சமத்துவத்தையும் சகோதரத்துவத்தையும் உண்டாக்குவதே இந்தப் பத்திரிக்கையின் தலையாய நோக்கம்.. (பெரியார் ஈ வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1, பக்கம். 461). குடிஅரசு இதழில் மிகுந்த ஈடுபாட்டோடு தமக்குப் பிடித்த ஒரு பாடலைப் பெரியார் வெளியிட்டிருக்கிறார். அந்தப் பாடல் அவர் மனத்தில் அடித்தளத்தில் நிலவிய உணர்வோட்டத்தைக் காட்டுவதாக இருக்கிறது. அது நாம் எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டிய ஒரு பாடல் என்பதால் அதை அப்படியே இங்கே தருவது பொருத்தம்.

''அனைத்துயிர் ஒன்றென் றெண்ணி
அரும்பசி எவர்க்கு மாற்றி
மனத்துளே பேதா பேதம்
வஞ்சம்பொய் களவு சூது
சினத்தையும் தவிர்ப்பா யாகில்
செய்தவம் வேறொன் றுண்டோ?
உனக்கிது உறுதி யான
உபதேச மாகுந் தானே!''

இந்தப் பாடலில் ஒளிருகின்ற சமத்துவம், இரக்கம், பசிதீர்த்தல், அமைதி, மனத்தூய்மை, நல்லிணக்கம் ஆகியவை பெரியார் உள்ளத்தைப் பெரிதும் ஈர்த்திருக்கின்றன. தமிழ்ச் சமுதாயம் சிந்தனை முடம்பட்டுச் சாம்பிக் கிடந்த நேரத்தில் முதன்மையான பணி அவர்களுடைய சுயமரியாதை உணர்ச்சியைத் தூண்டி விடுவதுதான். அதனால்தானோ என்னவோ பெரியார் சொல்லுகிறார், 'மனிதனுக்கு வெட்கமும் ரோஷமும் ஏற்படுவதற்காகவே சுயமரியாதை இயக்கம் ஏற்பட்டது' என்று சொல்லுகிறார். மேலும் தொடர்ந்து, 'சுயமரியாதை இயக்கம் மனித சமுதாயத்தையே மாற்றி யமைக்க ஏற்பட்டதாகும். இந்தக் காரியம் ஒரு சமூகப் புரட்சியில் ஏற்பட வேண்டியதே ஒழிய சிரிப்பு விளையாட்டில் ஏற்படக் கூடிய தில்லை.' என்று சொல்லுகிறார். (பட்டுக்கோட்டையில் 23-3-1936-இல் நிகழ்த்திய சொற்பொழிவு, பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1, பக்கம். 456).

1902-ஆம் ஆண்டு வாக்கில் ஒருநாள் நெருஞ்சிப் பேட்டை சாமியார் என்பவருக்கு ஈரோட்டில் ஒரு விருந்து வழங்கப்பட்டது. இந்த விருந்தின் போது பெரியார் அங்கே

நடந்து கொண்ட முறை தவறு என்று கருதி அவருடைய தந்தையார் அவரைக் கண் மண் தெரியாமல் நையப் புடைத்து விடுகிறார். இதன் விளைவாகச் சாதி உயர்வு தாழ்வுக் கருத்தைப் பெரியார் உள்ளம் கடுமையாக எதிர்க்கத் தொடங்குகிறது.

1905-இல் ஒரு பந்தியில் பலர் உண்ணும் இடத்தில் பெரியாரை ஒருவர் சூத்திரன் என்று மரியாதைக் குறைவாகக் குறிப்பிட்ட போது கைவல்ய சாமியார் வெகுண்டெழுந்து சூத்திரன் என்று சொன்னவரைப் பிடித்துக் கன்னத்தில் அறைந்து விடுகிறார். சாதி உயர்வு தாழ்வு மனப்பான்மையின் மீது பெரியாருக்கு வெறுப்பும் எதிர்ப்பும் வளர்ந்து கொண்டே போகிறது. முப்பது வயதை நெருங்குவதற் குள்ளாகவே அவருடைய உள்ளம் சாதி மதங்கள் மக்கள் மீது செலுத்தும் செல்வாக்கை அறவே ஒழிக்க வேண்டும் என்று உறுதி பூணுகிறது. மனித மதிப்பு சாதி உயர்வு தாழ்வின் பேரால் சீர்குலைக்கப்படுவதைக் கண்டு பெரியார் மனங்கொதிக்கிறார்.

சேரன் மாதேவி குருகுலப் போராட்டம் நாடறிந்த செய்தி.

குருகுலத்தில் படிக்கிற பிள்ளைகளுக்கிடையே பார்ப்பனர் பார்ப்பனரல்லாதார் என்ற வேறுபாட்டு உணர்வையும் ஏற்றத் தாழ்வு உணர்வையும் அங்கே நிலவிய தனிப் பந்தி முறையும் தனித் தண்ணீர்ப் பானை முறையும் தூண்டிவிட்டு ஒரு போராட்டத்துக்கே வழி கோலி விட்டு விட்டது. அங்கே படித்த பிள்ளைகளில் பார்ப்பனரல்லாத சிறுவன் ஒருவன் பார்ப்பனப் பிள்ளைகளுக்கு வைக்கப்பட்டிருந்த தண்ணீர்ப் பானையிலிருந்து தண்ணீர் எடுத்துக் குடித்து விட்டான். இதைப் பார்த்து ஆத்திரமடைந்த பார்ப்பனச் சிறுவன் தண்ணீர் குடித்த "சூத்திரன்" வீட்டுச் சிறுவன் கன்னத்தில் ஓங்கி அறைந்து விட்டான். அடிபட்ட பையன் ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியார் அவர்களின் ஒரே மகன். சாதி ஏற்றத் தாழ்வு உணர்ச்சிக்குக் குருகுலம் இடம் தந்திருக்கக் கூடாது. இந்தச் சிக்கல் அப்போது மிகப் பெரிதாக முற்றி முடிவில் குருகுலமே அழிந்து விட்டது.

குருகுலத்தில் எழுந்த சிக்கல் குறித்து ஆராய்வதற்கு ஒரு குழு அமைக்கப் பட்டது என்றும் அந்தக் குழு நிலைமையை ஆராய்ந்து அறிக்கை வழங்கியது எனறும்

அறிகிறோம். இது பற்றிச் சேரன்மாதேவி குருகுலப்போராட்டம் என்ற நூலை உருவாக்கிய திரு நாரா நாச்சியப்பன் அவர்கள் கூறுவது நாம் இங்கே கருதத் தக்கது;

*"பெரியார் ஈ.வெ.ரா. வின் ஏற்பாட்டின்படி 1925ஆம் ஆண்டு சனவரி 17ஆம் நாள் தமிழ்நாடு காங்கிரசு செயற்குழு கூடியது. இச் செயற்குழுவில் குருகுலச் சிக்கல் குறித்து ஆராய மூவர்குழு அமைக்கப்பட்டது. அக் குழுவில் கணபதி சாஸ்திரி, வி தியாகராயச் செட்டியார், கே.எம். தங்கப் பெருமாள் பிள்ளை ஆகியோர் இடம் பெற்றனர். இக் குழு குருகுலத்துக்குச் சென்று நிலைமையை ஆராய்ந்தது.*

*"குருகுலத்தில் சாதி வேறுபாடு நிலவுவது உண்மைதான் என்றும் அதை நடத்தி வரும் வ.வே.சு. ஐயரே இரண்டு பிராமணப் பையன்களுக்குத் தனியாக உணவருந்த ஏற்பாடு செய்து கொடுத்தார் என்றும் இதை யொட்டிப் பார்ப்பனர்களுக்குத் தனிப் பந்தி என்றும் மற்றவர்களுக்குத் தனிப் பந்தி என்றும் நடைமுறைப்படுத்தப்பட்டது என்றும் அவர்கள் கண்டறிந்தனர்."*

இதிலிருந்து நாம் விளங்கிக்கொள்ளவேண்டிய செய்தி என்ன? வருணாச்சிரம தருமத்தில் அக்கறை உள்ளவர்கள் தேசியம் பேசினாலும் சீர்திருத்தம் பேசினாலும் புரட்சி பேசினாலும் சாதி ஏற்றத் தாழ்வை ஒழிக்க முன்வரமாட்டார்கள்; மனித சமத்துவத்துக்கு எதிரிகளாக இருந்துதான் கீழறுப்பு வேலைகளைச் செய்வார்கள். மனித சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் சம வாய்ப்பு வேண்டும், சம உரிமை வேண்டும் என்று கேட்கும் சுயமரியாதை இயக்கம் சம வாய்ப்பு, சம உரிமை, சுயமரியாதை இவற்றை ஒரு கும்பலுக்காகக் கேட்க வில்லை; மக்களுக்காகக் கேட்கிறது. இன்னும் சொல்லப் போனால், சம வாய்ப்பு, சம உரிமை, சுயமரியாதை ஆகிய இந்த மூன்றும் வருணாச்சிரம வாதிகளுக்கும் தேவை என்பதை மறுத்ததில்லை.

பள்ளிப் பிள்ளைகளிடையே கூட மேல் சாதி ஆணவம் எவ்வளவு ஓங்கி நின்றிருக்கிறது என்பதற்குச் சேரன் மாதேவி குருகுல நிகழ்ச்சி ஒரு பெரிய சான்று. அறை வாங்கிய பையன் உத்தமர் ஓ.பி.ஆர். அவர்களின் ஒரே மகன், பெயர் சுந்தரம். 1923 வாக்கில் நடந்த இந்த நிகழ்ச்சி பெரியாரை மிகவும்

பாதித்திருக்கிறது. வைக்கத்தில் நடந்த தீண்டாமை ஒழிப்புப் போர் (30-3-1924 முதல் 29-11-1925 வரை) பெரியாரின் சிந்தனைப் போக்கையும் செயற்போக்கையும் நெறிப்படுத்தி உறுதிப்படுத்தி அவரை எண்ணிய எண்ணியாங் கெய்தும் திண்ணியராக மாற்றியிருக்கிறது.

இப்படிப் பட்ட சூழல் சுயமரியாதைக்காக ஒரு அமைப்பு வேண்டும் என்ற எண்ணத்தைப் பெரியாரிடம் வலுப்படுத்தி விரைந்து செயற்படுமாறு அவரைத் தூண்டுகிறது. 19-12-26-இல் குடிஅரசு ஏட்டில் சுயமரியாதைச் சங்க ஸ்தாபனம் என்ற தலைப்பில் பெரியாரின் சுற்றுப் பயணச் செய்தி விவரம் வெளிவந்தது. பார்ப்பனரல்லாதாரின் பத்தாவது மாநில மாநாடு 1926 டிசம்பர் 25,26 ஆகிய தேதிகளில் மதுரையில் நடந்தது. சுயமரியாதைக் கொள்கைகள் சரியாக வடிவெடுத்தது இந்த மாநாட்டில்தான் என்று அறிஞர் ஆனைமுத்து நன்கு ஆராய்ந்து கருத்துரைக்கிறார் (பெரியாரியல், தொகுதி 1, பக்கம். 128).

சுயமரியாதை இயக்கத்தின் தோற்றம் பற்றி வேறு வேறு கருத்துகள் உள்ளன என்பது இந்த இயக்கம் பற்றி ஆய்வு செய்தவர்களுக்கு நன்கு தெரியும். இந்த விவாதத்துக்கெல்லாம் ஒரு முற்றுப் புள்ளி வைக்கிற பாங்கில் அறிஞர் ஆனைமுத்து அவர்கள் வேறுபட்ட கருத்துகளையெல்லாம் எடுத்துக் கூறி அவற்றின் வன்மை மென்மைகளை ஆராய்ந்து இறுதியாகச் சுயமரியாதை இயக்கம் 26-12-1926-இல்தான் தோற்றம் பெற்றது என்று உறுதிப் படுத்துகிறார். இப்படி உறுதிப் படுத்தும் போது தாம் இதற்கு முன்பு கொண்டிருந்த கருத்தையுங்கூட மறுத்துப் புதிய சான்றுகளின் அடிப்படையில் அறிஞர் ஆனைமுத்து அவர்கள் சுயமரியாதை இயக்கம் 26-12-1926-இல்தான் தோன்றியது என்று உறுதிப்படுத்துகிறார். அதை நாம் அப்படியே ஏற்றுக் கொள்ளுவது தகும்; ஏற்றுக்கொள்ள எந்தத் தடையும் இல்லை.

1926, 1927-இலேயே சுயமரியாதை இயக்கத்தை முறைப்படி பதிவு செய்ய முயற்சி எடுக்கப்படுகிறது. எதிர்பாராத வகையில் ஏற்பட்ட பல்வேறு தடங்கல்களால் பதிவு செய்வதில் தாமதம் ஏற்படுகிறது. 22-9-52-இல் திருச்சிராப்பள்ளியில் 'Periyar Self-Respect Propaganda Institution'

என்ற பெயரில் இயக்கம் பதிவு செய்யப் பெற்றது. இதற்கிடையே Self-Respect League என்ற பெயரில் ஒரு அமைப்பு பதிவு செய்யப் பட்டிருப்பதாக அறிகிறோம். (ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1, பக்கம், 528-530). அப்படி ஏதோ ஒரு உள் நோக்கத்தோடு செய்யப்பட்ட பதிவைப் பெரியார் பொருட்படுத்த வில்லை. அந்தப் பதிவு பெரியாரின் சுயமரியாதை இயக்கத்துக்கு எந்த விதமான பாதிப்பையும் ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை.

சுயமரியாதை இயக்கத்தைப் பொறுத்த வரையில் பெரியார் மிகவும் பரிவுணர்ச்சி கொண்டவராகவும் தாராள சிந்தை உடையவராகவுமே திகழுகிறார். இந்த இயக்கத்தைப் பொறுத்த வரை பெரியார் அவர்களுக்கு அறிவும் மானமுமே முக்கியமாக இருந்திருக்கிறது. மனிதன் மானத்தோடு வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்; ஒவ்வொருவரும் எது சரி, எது தப்பு என்று தாமே பகுத்தறிவின் துணைக் கொண்டு ஆராய்ந்து பார்த்து முடிவு செய்ய வேண்டும். கண்மூடித்தனமாக வாழக் கூடாது. இது தான் சுயமரியாதைக்கு அடிப்படைத் தத்துவமாக விளங்குகிறது. மனித சமத்துவத்துக்கு எதிராகக் கட்டப்பட்டிருக்கும் கோட்டைகள் சரியான அடிப்படையில் கட்டப் படவில்லை. அந்த அடிப்படைகள் அறிவுக்குப் பொருத்தமானவையாக இல்லை. அறிவுக்குப் பொருந்தாத வாதங்களையும் மனித சமத்துவத்துக்கு எதிரான வெற்று நம்பிக்கைகளையும் தகர்த்தெறிவதில் பெரியார் கண்டிப்பாக இருந்தார். அங்கே விட்டுக் கொடுப்புக்கு அவர் ஒருபோதும் இடம் தந்ததே இல்லை. ஆனால், அரசியல் கட்சி எல்லைகளைக் கடந்தும் சாதி மத வேறுபாடுகளைக் கடந்தும் இந்த இயக்கத்தில் அன்பர்களைச் சேர்த்துக் கொள்ளுவதில் அவர் மிகவும் தாராளமாகவே இருந்திருக்கிறார். "ஏதோ ஒரு வழியில் நாம் மக்களுக்குப் பகுத்தறிவை உண்டாக்கி விட்டோமானால் பிறகு அவர்கள் எல்லாவற்றையும் ஒரே கண்ணாடி கொண்டு பார்த்து உண்மையை உணரக் கூடியவர்களாகி விடுவார்கள்." என்று பரிவோடு பெரியார் ஒரு தலையங்கத்தில் (குடிஅரசு 12-4-1931, ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம், 487) எழுதுகிறார்.

"சுயமரியாதை இயக்கம் இந் நாட்டு மக்களுக்கு மான உணர்ச்சி ஏற்படவும் எல்லா மக்களையும் சமூகம், பொருளாதாரம் ஆகியவற்றில் சமப்படுத்தி ஒன்று சேர்க்கவும் ஏற்பட்டதாகும். மற்றும் பல கொள்கைகளை அது கொண்டிருந்தாலும் மற்றபடி அது நம் எதிரிகள் சொல்வதுபோல மதங்களையும் கடவுள்களையும் எதிர்ப்பதற்கென்றே ஏற்பட்டதல்ல.

"நமது நாட்டு மக்களுக்கு மான உணர்ச்சி இல்லாமல் போனதற்கும், ஒற்றுமையும் சமத்துவமும் இல்லாமல் போனதற்கும் ஏற்பட்டுள்ள தடைகள் யாவும். ஒழிக்கப் பட வேண்டும் என்று சொல்லுவதிலும், அவற்றை ஒழிக்க முயற்சிப்பதிலும் உண்மையிலேயே சுயமரியாதை இயக்கம் சிறிதும் ஒளிவு மறைவு இல்லாமல் பாடுபடுகிறது.

"இந்தக் காரியங்கள் செய்வதில் மதங்களோ, கடவுள்களோ, வேறு எவைகளானாலும் சரி, அத் தொண்டிற்குத் தடையாய் இருந்தால் அவற்றையும் ஒழிப்பதில் சுயமரியாதை இயக்கம் பின்வாங்காது."(நாமக்கல்லில் 12-12-1937-இல் பெரியார் நிகழ்த்திய சொற்பொழிவில் ஒரு பகுதி. குடிஅரசு 13-12-1937, ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம், 458).

மேற்கண்ட பகுதி சுயமரியாதை இயக்கத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கே விளக்கம் போல அமைந்து விட்டது.

ஆம்பூரில் 28-11-1937-இல் பேசும்போது மேலும் சில தெளிவையும் விளக்கத்தையும் தருகிறார்.(ஈ.வெ.ரா. சிந்தனைகள் பக்கம். 457-458). அதையும் இங்கே பதிவு செய்வது பொருத்தம்.

"சுயமரியாதை இயக்கத்தை ஆதரிக்கவோ தழுவவோ வரும் முஸ்லிம்களுக்கும் மற்றவர்களுக்கும் இயக்கத்தின் பேரால் நான் ஒன்று சொல்லுகிறேன். அதாவது, இந்த இயக்கத்துக்கு என்று வகுத்திருக்கும் கொள்கைகளில் நாத்திகம் ஒரு கொள்கையாகக் குறிப்பிடப் பட்டிருக்கவில்லை.

"சுயமரியாதை இயக்கத்தில் சகல மதக்காரருக்கும் சகல அபிப்பிராயக்காரருக்கும் இடம் உண்டு. அதன் கொள்கை இவ்வளவுதான்;-'மனித சமூகத்தில் உள்ள குருட்டுப் பழக்க வழக்கங்களையும் மூட நம்பிக்கைகளையும் விளக்கமறியாச்

*சடங்குகளையும் அவற்றிற்காகச் செய்யப்படும் செலவுகளையும் ஒழித்தல்'.*

*'சாதி, மதம், வகுப்பு ஆகியவைகளின் பேரால் ஏற்பட்டுள்ள பேதங்களையும், சமூகத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் இருந்து வரும் உயர்வு தாழ்வுகளையும் அகற்றி மக்கள் யாவரும் ஒரே சமூகமாகவும் சகோதரத்துவமாகவும் சமமாக வாழும்படி செய்தல்'*

*'பகுத்தறிவுக்கும் சுயமரியாதைக்கும் கட்டுப்பட்டு நடக்கும்படி மக்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சியை உண்டாக்குதல்.' இதை நடத்தி வைக்க வேண்டிய காரியத்திற்கும் ஆத்திக நாத்திகத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? ஆத்திகமும் நாத்திகமும் அவரவருடைய அபிப்பிராயமும் ஆராய்ச்சித் திறமும் ஆகும்."*

மத நம்பிக்கையாளர்களுக்கு இந்த விளக்கம் போதுமானதாக அமைவதோடு அவர்களையும் இந்த இயக்கம் தன்னுள் தழுவிக் கொள்ளக் கை நீட்டி வரவேற்கிறது. சுயமரியாதை இயக்கம் மதத்துக்கு விரோதமல்ல. மதத்திற்கும் சுயமரியாதைக்கும் உள்ள உறவு இதுதான்.

சாதிக் கருத்துக்கும் சுயமரியாதைக்கும் உள்ள உறவு சற்று வேறுவிதமானது. சாதி ஏற்றத் தாழ்வு மறைந்தாலொழிய மனித சமத்துவத்துக்கும் சுயமரியாதைக்கும் இடம் இல்லை. ஆகவே சுயமரியாதை இயக்கம் சாதி அடியோடு ஒழிய வேண்டும் என்கிறது. சாதி ஏற்றத் தாழ்வு என்பது வருணப் பகுப்போடு பின்னிப் பிணைந்து கிடக்கிறது. அதேபோலச் சாதி ஏற்றத் தாழ்வோடு பொருளாதார ஏற்றத் தாழ்வுக்கு நெருங்யனகிய தொடர்பு உண்டு. பொருளாதார ஏற்றத் தாழ்வை ஒழிக்க வகுப்புரிமைக் கருத்து தேவைப் படுகிறது.

சமுதாயயத்தில் எல்லாத் தரப்பு மக்களுக்கும் கல்வியும் வேலையும் பதவியும் கிடைக்க - சுருக்கமாகச் சொன்னால் சமுதாயச் சம நீதி கிடைக்க வகுப்புரிமைக் கோட்பாடுதான் கைகொடுத்திருக்கிறது. நமது சமுதாயச் சூழலில் ஒவ்வொரு மனிதனும் சம வாய்ப்பும் சம உரிமையும் பெற்றுச் சுயமரியாதையோடு வாழ

1. வருணப் பகுப்பு சுவடு தெரியாமல் உதிர வேண்டும்
2. ஆண் பெண் உயர்வு தாழ்வு மனப்பான்மை மாறவேண்டும்

3. பொருளாதார ஏற்றத் தாழ்வு சமப்படுத்தப்படவேண்டும்

4. சாதி உயர்வு தாழ்வு மனப்பான்மை அடியோடு அழிக்கப்பட வேண்டும்

இவற்றை நிறைவேற்றச் சுயமரியாதை இயக்கம் இடைவிடாது பாடுபட்டிருக்கிறது. குறிக்கோளில் உறுதியாக நின்றிருக்கிறது. இந்த இயக்கம் வன்முறையில் நம்பிக்கை வைத்த தில்லை. இதை மிக நன்றாகக் கூர்ந்து கவனித்து எஸ்.வி. ராஜதுரையும் வ. கீதாவும் சொல்லுவதை இங்கே சுட்டிக் காட்ட வேண்டும்;

"காலங் காலமாக வன்முறையால் பாதிக்கப் பட்ட திராவிடர்கள் மீண்டும் கிளர்ச்சிகள் என்ற பெயரால் வன்முறையில் ஈடுபட்டு வதைபடக் கூடாது என்று கருதியவர் பெரியார். மேலும், எத்தகைய பலாத்கார நடவடிக்கைகளாலும் மக்கள் மனத்தில் மண்டிக் கிடக்கும் மூட நம்பிக்கைகளையும் சாதிய உணர்வுகளையும் களைந்தெறிந்து விட முடியாது என்றும் ஒரு புறம் நீண்ட காலம் பிரச்சாரங்கள், மற்றோர் புறம் சட்டங்கள் ஆகியவற்றின் மூலம் அவற்றைப் போக்க முடியும் என்றும் கருதினார். (காண்க, பெரியார்: சுயமரியாதை சமதர்மம், பக்கம். 503)

சுயமரியாதை இயக்கத்தின் செயல் பாடுகளை நன்கு கவனித்து அதன் போக்கினைப் புரிந்து கொண்டு அது பெற்ற வெற்றிகளையும் .கணக்கில் எடுத்துக் கொண்ட எல்லோரும் மேற்கண்ட கூற்றினை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்வார்கள்.

1980 வாக்கிலேயே சென்னைப் பல்கலைக்கழகத்தின் முன்னைத் துணைவேந்தர் நெ.து. சுந்தரவடிவேலு அவர்கள் கிட்டத்தட்ட இதே கருத்தை வேறு விதமாகச் சொல்லி யிருக்கிறார்.(பெரியாரும் சமதர்மமும், பக்கம் 130). என்ன சொல்லுகிறார்?

"பெரியார் அறிவு பூர்வமாக எவ்வளவுதான் காந்திய முறைகளைக் கண்டித்தாலும், நடைமுறை என்று வரும்போது காந்தியை மிஞ்சும் சாத்வீகியாகவே நடந்து வந்தார்.

"அவராலோ அவரது இயக்கத்தாலோ மற்றொருவர் உயிருக்கோ உடைமைக்கோ பொதுச்சொத்துக்கோ சிறிதளவு

இழப்பும் ஏற்பட்டதில்லை என்பது பெரியாருக்கு உரிய தனிச் சிறப்பாகும். அச் சிறப்பு அவருக்குப் பின்னரும் தொடர்வதைக் காண்கிறோம்.”

உண்மை இப்படி இருந்தும் இந்த இயக்கத்தைப் பற்றித் தொடர்ந்து தவறான கருத்துகள் திட்டமிட்டுப் பரப்பப் பட்டன.

இதன் விளைவாக 1935-இல் இந்த இயக்க அன்பர்கள் இருவர் மீது இராஜ துவேஷக் குற்றம் சாட்டப் பட்டு வழக்கு தொடரப் பட்டு விட்டது. அரசின் ஒடுக்குமுறைக் கண் இந்த இயக்கத்தின் மீது விழுந்து விட்டது. இந்த நிலையில் பெரியார் இயக்கத்தையும் இயக்கத் தோழர்களையும் காப்பாற்ற வேண்டியது முதன்மையானது என்று முடிவு செய்து கொண்டு வேண்டிய விளக்கங்களைத் தந்து அரசோடு சமாதானமாகிறார். “சர்க்காரோடு இந்த மாதிரியான ஒரு சமாதான முடிவுக்கு வராத பட்சம் சர்க்காருக்கும் நமக்கும் வீண்தொந்தரவும் மனக்கசப்பும் ஏற்பட்டுத் தீரும் என்கிற நிலையில் மற்ற ஆதாரங்களும் முயற்சிகளும் நிலைமைகளும் இருந்ததால் நான் இந்தச் சமாதானத்துக்கு வரவேண்டிய தாயிற்று. ஆகவே இதன் பலன் என்னவானாலும் அதற்கு நானே பொறுப்பாளி என்றுதான் சொல்ல வேண்டும்.” இப்படி 31-3-1935-இல் குடி அரசில் வெளிப்படையாக அறிக்கை விட்ட பெரியார் அவரே, மன்னித்துவிடுங்கள் என்று சொல்லி இயக்கத்தையும் தோழர்களையும் இடர்ப்பாடுகளிலிருந்து காப்பாற்றினார்.

அந்தச் சூழ்நிலையில் எதிரிகள் களிப்படைகிறார்கள். அரசு குற்றஞ்சாட்டி அழிக்கப் பார்க்கிறது. கூடவே இருக்கும் இயக்கத்தார் சிலர் கோணல் புத்தியால் குதர்க்கம் பேசுகிறார்கள். பெரியாரால் அவர்களுக்கு ஏதோ மானக்குறைவு நேர்ந்து விட்டதாகப் புலம்புகிறார்கள். இப்படிப்பட்ட நிலையில் விரிவாக 31-3-1935-இல் குடிஅரசில் விரிவாகப் பெரியார் அப்படி ஒரு அறிக்கை விடுகிறார். (காண்க, திருச்சி வே. ஆனைமுத்துவின் பெரியார் ஈவெரா. சிந்தனைகள், பக்கம். 517 - 521)

அந்த அறிக்கை நெஞ்சை உருக்குவதாகவும் அவருடைய பொறுப்பு மிகுந்த பொறுமையையும் மனத்

திண்மையையும் தொலைநோக்கையும் நிதானத்தையும் நமக்கு உணர்த்துவதாக உள்ளது. இயக்கத்தை அழிக்க எதிரிகள் செய்த சதியின் கொடுமையையும் அந்தச் சதிக்குப் பலியாகாமல் பெரியார் தம் தோழர்களையும் இயக்கத்தையும் காப்பாற்றி முன்னெடுத்த திறத்தையும் அந்த அறிக்கை நமக்கு உணர்த்துகிறது.

சாதி மாநாடுகளில் மகிழ்ச்சியாகக். கலந்து கொண்டு பெரியார் ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லவேண்டியதைச் சொல்லி யிருக்கிறார். 'நாம் பிறந்த சாதியை இழிவாக மதித்து இன்னொரு சாதியை உயர்வாக மதித்து அதனிடம் அடைக்கலம் புகுவதை விட இழிவு வேறொன்றும் இல்லை.' என்றும் 'பல்வேறு பெயர்களைக் கொண்டு சாதி பிரிந்து போவது கூடாது' என்றும் 1929-இல் திருச்சிராப்பள்ளியில் பெரியார் பேசியிருப்பது கூர்ந்து கவனித்துப் புரிந்து கொள்ளத் தக்கது.

சுயமரியாதைக்காரன் இந்தக் கொள்கையில் உடன்பாடு இல்லாத யாரிடமிருந்தும் எந்த உதவியும் பெறக் கூடாது என்று கருதுகிறார் பெரியார். அதை அவர் சொல்லுகிற முறை அதைப் படிக்கும் ஒவ்வொருவர் நெஞ்சையும் கவருவதாக இருக்கிறது. அந்தச் செய்தியை அவர் வாக்கில் அப்படியே தருகிறேன்.

..."இன்றைய தினம் வேண்டாதவர்களாக இருப்பவர்கள் நாளை வேண்டியவர்களாகலாம். வேண்டியவர்களாக இருப்பவர்கள் நாளை வேண்டாதவர்களும் ஆகலாம்."

"ஆதலால் அப்படிப்பட்ட சமயங்களில் நாமும் மற்ற யாரும் மன வருத்தப் படாமல் இருப்பதற்கு எவ்வித உதவியும் யாரிடமிருந்தும் பெறாமல் இருந்தால்தான் முடியும். அன்றியும் இந்தப்படி தைரியமாயும் உறுதியாயும் இருக்க வசதி இருந்தால்தான் நமது அபிப்பிராயத்தை நிலைநிறுத்தப் பாடுபட முடியுமே ஒழிய தாட்சண்யம் இருந்தால் முடியவே முடியாது." (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 504)

முழுக்க முழுக்க இது நடைமுறை உண்மை. சுயமரியாதைப் பணிகளுக்கும் சுயமரியாதை தேவைப்படுகிறது.

நடைமுறை வாழ்வுச் சூழல்களை நன்கு நினைவில் கொண்டு மிகுந்த பரிவோடும் பெருந்தன்மையோடும் சுயமரியாதைக் கொள்கை பற்றியும் சுயமரியாதை இயக்க அன்பர்களைப் பற்றியும் 1-9-1930-இல் திருச்சியில் பேசியுள்ள பேச்சின் ஒரு பகுதி இந்தக் காலச் சூழலில் நாம் நினைக்க வேண்டிய பகுதி;

*"சுயமரியாதை இயக்கமானது பரந்த கொள்கைகளை உடையது. ஒருவரால் உண்டாக்கப் பட்டாலும் பரந்த மக்களிடையே பரவி விட்ட படியினால் அசைக்க முடியாத நிலைமைக்கு வந்து விட்டது. மக்களே அதைக் கவனித்துக் கொள்வார்கள். சுயமரியாதை இயக்கத்தில் தீவிரப் பற்றுள்ள ஒருவருடைய குடும்பத்தில் மற்றவர்கள் வேறு மாதிரியாக இருந்தால், அவர் ஒருவர் மட்டும் என்ன செய்ய முடியும்? அவர்களைத் திருப்பமுடியாவிட்டால் அவர்களை விட்டு விலக வேண்டும். இல்லையேல் அவர்களுடன் கலந்துதான் இருக்க நேரிடும். அதற்கு ஒரு குற்றமும் கூறக் கூடாது. படிப்படியாக வரவேண்டும். பழைய கால வழக்கங்களை அனுசரிப்பவர்களைத் திருப்பிக் கொண்டுவருவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. எல்லோரும் ஒரேமாதிரியான கொள்கைகளை அனுஷ்டானத்தில் கொண்டுவரும் வரையில் தவறுதல்கள் இருந்தாலும் அதை ஒரு பெரிய விஷயமாகக் கொள்ளக் கூடாது." (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 505-506).*

பெரியாரின் இந்தத் தாராள சிந்தனையும் மனித நேயமுந்தான் இடைவிடாத எதிர்நீச்சலில் அவருக்கு வலிவும் வளமும் சேர்த்திருக்கிறது. பகைமைக்கு இடந்தராத பண்பாட்டுக்கு அவர் ஒரு சிறந்த இலக்கியம்.

மிகச் சில வேளைகளில் ஒத்த உணர்வினரோடு பெரியார் உரசலுக்கு உள்ளாகி யிருக்கிறார். அப்படிப்பட்ட நேரங்களில் பெரியார்தான் மிகவும் பெருந்தன்மையோடு நடந்து கொண்டிருக்கிறார். மறைமலை அடிகளார், திரு.வி.க., பாவேந்தர், முதலான பெருமக்கள் பெரியாரோடு உரசி யிருக்கிறார்கள். மிகப் பெருந்தன்மையோடு அந்த உரசல்களைப் பெரிதுபடுத்தாமல் பெரியார் ஓசைப்படாமல் ஒதுக்கி யிருக்கிறார். எதிரிகள் உரசினால் போர் முழக்கம் செய்யும் பெரியார் நண்பர்கள் உரசியபோது மவுனமாக ஒதுங்கி யிருக்கிறார்.

பெரியார் நடத்திய போராட்டம் ஒவ்வொன்றும் கடுமையானவை. ஒவ்வொரு போராட்டமும் திட்டமிட்ட போராட்டம்; திடீர்ப் போராட்டமல்ல. பதினைந்து பதினாறு முறை சிறை சென்றிருக்கிறார். தண்டம் கட்டியிருக்கிறார். தொல்லை வரும் என்று அவருக்குத் தெரியும். ஒரு முறை நீதி மன்றத்தில் சொல்லுகிறார்,

> 'நாங்கள் புலிவேட்டை ஆடுகிறோம். புலி மேலே
> பாய்ந்தால் ஒருவர் இருவர் கடிபட வேண்டியதுதான்.'
> (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 275).

கடுமையான தண்டனையை எதிர்பார்த்தே அவர் ஒவ்வொரு போராட்டத்திலும் இறங்கி யிருக்கிறார். அவர் மேற்கொண்ட போராட்டம் எதுவும் விளையாட்டான போராட்டமல்ல என்பது அவர் பேச்சிலிருந்தே பளிச்செனத் தெரிகிறது. உண்மை, அறிவு, ஒழுக்கம், நாணயம் ஆகியவற்றை அவர் உயிர் போல மதித்ததால் அவர் அச்சம் அறியாதவராக வாழ்ந்தார்.

சுயமரியாதை இயக்கத்துக்கு எதிர்ப்புகள் வருவதில் வியப்பில்லை. மூடர்களும், மூடநம்பிக்கையில் வாழுபவர்களும், மூடநம்பிக்கையால் வாழுபவர்களும் கண்டிப்பாக எதிர்ப்பார்கள். இவர்கள் ஆதரவில் வாழும் பத்திரிகைகள், தலைவர்கள், பெரிய மனிதர்கள் முதலான எல்லோரும் எதிர்ப்பார்கள்தானே? எதிர்த்தார்கள். இவற்றை யெல்லாம் எதிர்கொண்டு பெரியார் அன்றே சொன்னதுபோல், “இவ்வளவுக்கும் சுயமரியாதை இயக்கம் ஒரு சிறிதும் பின்னடையாமல் - அடிக்க அடிக்கப் பந்து எழுவதுபோல, விஷமப் பிரச்சாரம் செய்யச் செய்ய இப்போது இந்திய தேசம் முழுவதும் 'பஞ்சில் நெருப்புப் பிடிப்பதுபோல்' மக்களிடம் பரவிக் கொண்டே போகின்றது.”

அவர் வாக்கிலேயே சில செய்திகளை நாம் தெரிந்துகொண்டால்தான் இந்த இயக்கத்தின் ஆற்றலும் பெருமையும் நமக்கு விளங்கும்.

“இனியும் இரகசியமாகச் செய்த இழிதகைப் பிரச்சாரத்திற்கு அளவே இல்லை. என்னவெனில், நம்முடைய தனிப்பட்ட நாணயத்தைப் பற்றியும் நடவடிக்கைகளைப் பற்றியும் ஒழுக்கங்களைப்

*பற்றியும் எவ்வளவோ கேவலமாகப் பேசியும், கூலி கொடுத்துக் காலிகளை ஏவிவிட்டுப் பேசச் செய்தும் செய்யப்பட்ட இழி பிரச்சாரத்திற்கு அளவே இல்லை. இவ்வளவும் போதாமல் நம்மைக் கொன்றுவிடுவதாகவும் குத்திவிடுவதாகவும் சுட்டுவிடுவதாகவும் மற்றும் பலவிதமாய் அவமானப் படுத்தி விடுவதாகவும் கண்டு எழுதிய அனாமதேயக் கடிதங்களுக்கும் பொய்க் கையெழுத்திட்ட கடிதங்களுக்கும் கணக்கே இல்லை. மற்றும் நமக்குள் இருந்த தொண்டர்களைக் கொண்டு செய்வித்த குறும்புகளுக்கும் அளவே இல்லை.*

*"இவ்வளவு சங்கடங்களையும் தாண்டி இவ் வியக்கம் இன்றைய தினம் ஒருவாறு தமிழ்நாட்டிலுள்ள பொது மேடைகளை யெல்லாம் கைப்பற்றி - தேசியத் தலைவர்கள் என்பவர்களை யெல்லாம் முக்காடிட்டு மூலையில் உட்கார வைத்தும், பெரிய பெரிய பண்டிதர்கள் சாஸ்திரிகள் சமயவாதிகள் சமயத் தலைவர்கள் என்பவர்களை யெல்லாம் வெளியில் தலைகாட்டுவதற்கு இல்லாமல் செய்துவிட்டதுடன், சாதி இறுமாப்பையும் சமய இறுமாப்பையும் பண்டித இறுமாப்பையும் கசகச என்று நசுக்கிக் கொண்டு வருகின்றது."*

*(பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம் 482-483)*

தூய்மையான தலைவர்களையும் அதிகாரிகளையும் பெரிய மனிதர்களையும் சான்றோர்களையும் இப்படியெல்லாம் மனம் நோகச் செய்யும் கயவர்களும் மூர்க்கர்களும் குறும்பர்களும் சமுதாய வயலில் அழிக்கப் பட வேண்டிய களைகள். இப்படிப்பட்ட சூழலில் "கொலையில் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ் களைகட்டதனோடு நேர்" என்ற குறள் நம் காதில் ஒலிக்கிறது. இப்படிப்பட்ட நிகழ்வுகளைப் பெரியார் சந்தித்த முறை நமக்கு வழிகாட்டும் வெளிச்சமாக விளங்குகிறது. இவற்றையெல்லாம் பொறுத்துப்பொறுத்துப் பெரியார் சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடுகிறார். இப்படிப்பட்ட அற்பர்களின் சிறுசெயல்கள் முளையிலேயே கிள்ளி எறியப் படாவிட்டால் சமுதாய மேம்பாட்டுக்கு அது இடையூறாக ஆகிவிடும். நல்லோர் மனத்தை நடுங்க வைக்கும் கீழ்மக்கள் அத்தகைய செயல்பாடுகளில் தொடர்ந்து ஈடுபட முடியாமல் அஞ்சி நடுங்க வேண்டும். நல்லோர் மனம் நடுங்கக் கூடாது.

உண்மையிலும் ஒழுக்கத்திலும் பெரியாருக்கு மிகுந்த மதிப்பு உண்டு. அப்பழுக்கற்ற அந்தச் சுயமரியாதைக்காரர் எல்லாத் துறைகளைப் பற்றியும் சிந்தித்திருக்கிறார்; எல்லாத் திசைகளிலும் சிந்தித்திருக்கிறார். அவர் தமிழ்நாட்டில் பிறந்தவர். ஆனால் அவருடைய சிந்தனைகள், தமிழ் நாட்டுக்குமட்டுமல்ல, உலகில் உள்ள ஒடுக்கப்பட்ட மக்கள் எல்லோருக்கும் தேவையானவை. அவருடைய சிந்தனைகள் தத்துவங்கள் போராட்டங்கள் கிளர்ச்சிகள் ஆகிய எல்லாவற்றுக்கும் ஆணிவேராகத் திகழ்வது சுயமரியாதைதான். இனி வரும் உலகுக்கும் மக்கள் நேயச் சுயமரியாதை உணர்ச்சிதான் சரியாக வழிகாட்டும்.

# 7.சுயமரியாதை இயக்கத்தின் விளைவுகள்

"சுயமரியாதை இயக்கக் கொள்கைகள் ஒன்றும் புதிதானவையோ ஏதாவது அதிசயமானவையோ என்று நீங்கள் மலைக்க வேண்டியதில்லை. அது மனிதன் அறிவு பெறவும் சமத்துவம் அடையவும் சுதந்திரம் பெறவும் பாடுபடுகின்றது. இவற்றிற்கு எதிராயும் தடையாயும் இருக்கும் எதையும் அடியோடு ஒழிக்கத் தைரியம் கொள்ளுகின்றது." (பழைய கடலூரில் 13.9.1931-இல் பெரியார் பேசியது, குடி அரசு 20-9-1931, பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 490).

பார்ப்பனரல்லாதாரின் பத்தாவது மாநில மாநாடு மதுரையில் 1926-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 25, 26ஆம் தேதிகளில் நடந்தது. இந்த மாநாடு வரலாற்றுச் சிறப்பு மிக்க மாநாடு என்றே சொல்ல வேண்டும். இந்த மாநாட்டில்தான் சுயமரியாதைக் கொள்கைக்கு முழு வடிவம் தரத் தக்க தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. 19-12-1926 முதல் இந்த மாநாட்டுக்கு உரிய ஏற்பாடுகளில் பெரியார் சிறப்புக் கவனம் காட்டி யிருக்கிறார். இந்த மாநாட்டு நடைமுறையையும் தீர்மானங்களையும் நன்கு ஆராய்ந்து பார்த்த பிறகு அறிஞர் ஆனைமுத்து அவர்கள் "பார்ப்பனர் அல்லாதார் இயக்கம் என்பதும் சுயமரியாதை இயக்கம் என்பதும் 26-12-1926-இல் ஒன்றிணைந்து விட்டதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்," என்கிறார்.

பார்ப்பனர் அல்லாதார் இயக்கமானது சுயமரியாதை இயக்கத்தோடு ஒன்றாக இணைந்து விட்டது என்பது இயல்பாக நடந்து விட்ட நிகழ்ச்சி. வருணப் பகுப்பு முறைப்படி பார்ப்பனர் எந்தத் தொழிலைச் செய்தாலும் இந்த நாட்டில் எங்கே வாழ்ந்தாலும் உயர்ந்த சமுதாய அந்தஸ்தைத் தாராளமாக அனுபவித்து வருகிறார்கள். மற்ற வருணத்தார் மீதுதான் இழிவு சுமத்தப் பட்டு வந்திருக்கிறது. சுயமரியாதை இயக்கத்தை வருணப் பகுப்பு வாதிகள் எப்போதும் எதிர்ப்பு உணர்ச்சியோடுதான் பார்த்து வந்திருக்கிறார்கள். பார்ப்பனர் அல்லாதார் சுயமரியாதைக்காக, அவர்களுக்கு உரிய

சமவாய்ப்புக்காக, சமஉரிமைக்காக அமைப்புகளும் இயக்கங்களும் தேவைப் பட்டிருக்கின்றன.

பார்ப்பனர் அல்லாதார் இயக்கம், தென்னிந்திய நல உரிமைச் சங்கம், நீதிக் கட்சி இவை யாவும் ஒரே நோக்கத்தில் இயங்கிய அமைப்பின் வேறு வேறு படிநிலைகள் என்றே கருதத் தக்கன. 1938இல் இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போராட்டத்தின் போது பெரியாருக்கு இரண்டாண்டுச் சிறைத் தண்டனை விதிக்கப் பட்டது. அவர் சிறையில் இருக்கும்போதே 30-12-1938-இல் நீதிக் கட்சியின் தலைவராக ஆக்கப் பட்டார். இவர் நீதிக் கட்சியின் தலைவராக ஆன பிறகு பார்ப்பனர் அல்லாதார் நலனுக்காகப் பாடுபடும் அமைப்புகளை யெல்லாம் திராவிட இயக்க அமைப்புகளாகவே அடையாளப் படுத்தினார்.

1941க்குப் பிறகு திராவிடர் கழகம் என்ற பெயரே புழக்கத்துக்கு வந்து விட்டது. 27-8-1944இல் சேலத்தில் நடந்த நீதிக் கட்சி மாநில மாநாட்டில் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்ற பெயர் முறைப்படி ஒரு தீர்மானத்தின் பேரில் திராவிடர் கழகம் என்று மாற்றி அமைக்கப் பட்டது. இதற்கு வேண்டிய முன்னேற்பாடுகள் 13-2-1944இல் சென்னையில் அறிஞர் அண்ணா அவர்கள் தலைமையில் நடந்த நீதிக் கட்சி மாநாட்டிலேயே நடந்து விட்டன. சேலத்தில் அந்தத் தீர்மானம் அண்ணாதுரைத் தீர்மானம் என்றே பெயர் பெற்றது. சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளைப் பெரியார் தலைமையில் இயங்கிய அமைப்புகள் அப்படியே ஏற்றுக் கொண்டன.

திராவிடர் கழகம் உருவாக்கப்பட்ட அந்த மாநாட்டில் பெரியாருக்கு எதிர்ப்பு ஏற்பட்டு அங்கேயே அது இருந்த இடம் தெரியாமல் மறைந்தது என்று திருச்சி ஆனைமுத்து அவர்கள் மூலம் அறிகிறோம். அவர் கூற்றாகவே அந்தக் குறிப்பைப் பதிவு செய்ய விரும்புகிறோம்:

"சேலத்தில் நடைபெற இருந்த மாநாட்டின் மூலம் பெரியார் அவர்களின் தலைமையை மாற்றிவிட வேண்டும் என முக்கிய தலைவர்கள் பலரும் முயன்றனர்.ஆயினும் அப்போதைய தஞ்சை ,திருச்சி மாவட்டங்களைச் சார்ந்த சுயமரியாதைத் தொண்டர்களும் மாகாணம் முழுவதிலுமிருந்து சென்ற இயக்கத்தினரும் சேலத்தில்

பெரியாருக்குத் தோற்றுவிக்கப் பட இருந்த எதிர்ப்பைத் தூசாக ஊதிவிட்டனர்." (காண்க, (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், முன்னுரைப் பகுதி. பக்கம். **xl).**

பார்ப்பனர் அல்லாதார் என்ற குறியீடு ஒரு எதிர்மறைச் சொல்லாக இருப்பது சுயமரியாதைக்கு ஒரு உறுத்தலாகவே இருந்தது. பார்ப்பனர் அல்லாதார்க்குத் தங்களுக்கென்று ஒரு பெயர் இல்லையா? அப்படிப் பெயர் இல்லாமல் இருப்பது கூட ஒரு இழிவுதான். வேண்டுமானால் சூத்திரர் என்று சொல்லிக் கொள்ளலாம். சூத்திரன் என்ற சொல்லின் மூலந்தானே காலங்காலமாக இந்த மக்கள் மீது இழிவு சுமத்தப் பட்டது. அந்தச் சொல்லை எப்படி ஏற்க முடியும்? தமிழன் என்று சொல்லலாமா? சொல்லலாம். அன்றைய சூழலில் இதில் இரண்டு சங்கடங்கள் இருந்தன. 1 ஆந்திரமும் கேரளமும் கருநாடகமும் நம்மை விட்டுப் பிரிவதற்கு முன்பு பார்ப்பனரல்லாதார் இயக்கம் அவர்களையும் தழுவிக் கொண்ட இயக்கமாக இருந்தது.

அன்றைய சூழலில் தமிழர் என்று நம்மைத் தனிப் படுத்திக் கொண்டு பார்ப்பனரல்லாதார் வலிமையைச் சிதைப்பது சரியான நிலைப்பாடாகாது. 2 பார்ப்பனரல்லாதார் என்பதற்குத் தமிழர் என்ற சொல் சரியான மாற்றாகாது. பெரும்பாலான வைதிகப் பார்ப்பனர்க்குத் தமிழ் மீது வெறுப்பு இல்லை என்றாலும் வடமொழி மீது பற்றும் மரியாதையும் அதிகம் ஆதலால் அவர்களைப் பார்ப்பனர் அல்லாத மற்ற தமிழர்களோடு ஒப்ப வைத்துப் பார்க்க முடிய வில்லை. அன்றியும் வருணாசிரமக் கோட்பாட்டைக் கைவிட அவர்களுக்கு விருப்பம் இருக்காது. கைவிட வேண்டும் என்ற தேவையும் அவர்களுக்கு இல்லை. அவர்களையும் தழுவிக் கொள்ளுகிற ஒரு சொல் சுயமரியாதை இயக்கத்துக்கு உதவியாக இருக்காது. அன்றியும் ஆரியர் அல்லாதவரைக் குறிக்கத் திராவிடர் என்ற சொல் பல நூறு ஆண்டுகளாகப் பயன்பட்டு வந்திருக்கிறது. இந்தக் காரணங்களால் பார்ப்பனர் அல்லாதார் என்பதற்கு மாற்றாகத் திராவிடர் என்ற சொல் ஏற்கப்பட்டது. இவற்றையெல்லாம் நன்கு புரிந்து கொள்வது இன்றைய சூழலில் மிகவும் தேவையானது.

இந்தக் கட்டத்தில் என். சுப்பிரமணியன் அவர்கள் The Brahmin in the Tamil Country என்ற நூலில் பிராமணர்களின்

மொழிமனப் பான்மையைப் பற்றித் தெரிவித்துள்ள ஒரு கருத்தை எடுத்துக் கூற வேண்டும். அந்தக் கருத்தை எஸ்.வி. ராஜதுரை அவர்கள் தம் நூலில் பின்வருமாறு தமிழாக்கம் செய்து தந்திருக்கிறார்.

"பெரும்பான்மையான பிராமணர்களுக்குத் தாய்மொழி கேவலமானதாகவே பட்டது, அதை வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலுங் கூட இது ஒரு விநோதமான உளவியல் போக்குதான்." விருப்பு வெறுப்பின்றிப் பார்த்தால் இத்தகைய மனப்பான்மைக்கு இடந்தருவது அவர்களின் சுயமரியாதைக்கு அழகல்ல.

இந்த வேளையில் தமிழர், திராவிடர் என்ற சொல்லாட்சி பற்றிப் பெரியார் தெரிவித்துள்ள கருத்தை இங்கே பதிவு செய்வது மிகவும் பொருத்தம். அவர் கருத்து பின்வருமாறு:

*"தமிழர் என்பது மொழிப் பெயர், திராவிடர் என்பது இனப்பெயர். தமிழ் பேசும் மக்கள் யாவரும் தமிழர் என்ற தலைப்பில் கூட முடியும். ஆனால் தமிழ் பேசும் அத்தனை பேரும் திராவிடர் ஆகிவிட முடியாது. இனத்தால் திராவிடனான ஒருவன் எந்தச் சமயத்தைச் சார்ந்தவனா யிருந்தாலும் எந்த மொழி பேசுபவனா யிருந்தாலும் அவன் திராவிடர் என்ற தலைப்பில்தான் சேருவான். ஆகையால் திராவிட மொழி தமிழ் என்ற காரணத்திற்காக, தமிழ் பேசும் திராவிட னல்லாத ஒருவன், மொழி காரணமாக மட்டுமே தன்னைத் திராவிடன் என்று கூறிக் கொள்ள முடியாது". (ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 548).*

சென்னை மாகாண திராவிடர் சங்கம் (1912), தென்னிந்திய நல உரிமைச் சங்கம் (1916), பார்ப்பனர் அல்லாதார் சங்கம் (1916) நீதிக் கட்சி (1918) ஆகிய எல்லா அமைப்புகளும் பார்ப்பனரல்லாதார் கல்வி பெறவும் வேலை வாய்ப்பைப் பெறவும் சுய மரியாதையோடு வாழவும் இடை விடாது பாடு பட்டிருக்கின்றன.

1950இல் இந்திய நாடு விடுதலை பெற்ற பிறகு உயர் நீதி மன்றமும் உச்ச நீதி மன்றமும் வழங்கிய தீர்ப்புகள் எளிய மக்களுக்கு இருந்த கல்வி வாய்ப்பு உரிமையைப் பறிப்பதாக அமைந்து விட்டது. இந்தத் தீர்ப்புகளை ஒட்டி நடந்த கிளர்ச்சி

பற்றியும் விளைவு பற்றியும் அறிஞர் ஆனைமுத்து அவர்கள் அறிவிக்கும் செய்தியை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

"வகுப்புவாரி உரிமை கல்வியில் வழங்கப்பட வழி செய்க, வகுப்புவாரி உரிமைக்கு எதிரான அரசியல் சட்டம் ஒழிக! என்கிற கோரிக்கைகளை முன்வைத்து, இந்திய அரசின் போக்கினை எதிர்த்துக் கிளர்ச்சிகளை அறிவித்தார். பெரியாருடைய இக் கோரிக்கை பற்றி ஏ. இராமசாமி முதலியார் வழியாக நல்லவண்ணம் அறிந்து கொண்ட அன்றைய உள்துறை அமைச்சர் சர்தார் வல்லபாய் படேல் பிரதமர் ஜவஹர்லால் நேருவிடம் பெரியாரின் இக் கோரிக்கையைப் பரிந்துரைத்தார். இதனை ஏற்றுக் கொண்ட பிரதமர் இதற்கென அரசியல் சட்டத்தில் விதி 15 இல் 4ஆவது உள்பிரிவு ஒன்றைப் புதிதாக இணைத்துத் திருத்தம் செய்து 2-6-1951-இல் நிறைவேற்றினார். அது சமயம் நிறைவேற்றப்பட்ட அரசியல் சட்ட முதலாவது திருத்தங்களுள் இது மிக முதன்மையானது ஆகும்." (காண்க. திருச்சி வே. ஆனைமுத்துவின் 'பெரியாரியல்', தொகுதி 1, பக்கம் 103).

பெரியார் எடுத்த முயற்சியினால் இந்தத் திருத்தம் நிகழ்ந்தது. இந்தத் திருத்தம் நடக்காமற் போயிருந்தால் எளிய மக்களுக்கு நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு இழப்பை உண்டாக்கக் கூடிய பெருந் தீம்பாக முடிந்திருக்கும்.

சுயமரியாதை இயக்கத்தின் பணிகள் சமுதாய வாழ்வில் பல்வேறு படிநிலைகளில் எளிய மக்கள் எல்லோரையும் தலைநிமிர வைத்திருக்கின்றன.

பெரியார் நடத்திய சாதி ஒழிப்புக் கிளர்ச்சியும் சட்ட எரிப்புக் கிளர்ச்சியும் சாதி ஏற்றத் தாழ்வுக் கொடுமைகளை அம்பலப் படுத்தின. பிராமணாள்கள் சாப்பிடும் இடம் என்ற பெயர்ப் பலகைகளுக்குத் தார்ப்பூச்சு போட்ட போராட்டம் சாதி உயர்வு ஆணவத்தைக் குறைத்து உணவு விடுதிகளை எல்லோருக்கும் பொதுவாக்கியது.

கேரளத்தில் உள்ள வைக்கத்தில் தீண்டாமையை எதிர்த்துப் பெரியார் தலைமையில் நடந்த கிளர்ச்சி இந்திய நாட்டையே ஒரு உலுக்கு உலுக்கியது. தீண்டாமைக் கோட்டை முதன்முதலாக ஆட்டங்கண்டு குலுங்கியது.

சேரன் மாதேவி குருகுலத்தில் பள்ளிப் பிள்ளைகளுக்குச் சாதி உயர்வு தாழ்வுப் போதையை ஊட்டி

வந்த செய்தி அம்பலப்படுத்தப் பட்டது. அப்படிப் பட்ட கேடான காரியங்களுக்கு முற்றுப் புள்ளி வைக்கப் பட்டது.

மகளிர் மேம்பாட்டுக்காகவும் மகளிர் உரிமைக்காகவும் குரல்கொடுத்து, மாநாடுகளிலும், ஊர்வலங்களிலும் கிளர்ச்சிகளிலும் முதன்முதலாகப் பெண்களுக்குப் பெரிய பொறுப்புகளைக் கொடுத்து அவர்களைப் பாராட்டி ஊக்குவித்த இயக்கம் சுயமரியாதை இயக்கந்தான் என்றால் அது தவறாகாது.

சுயமரியாதைத் திருமணம், கலப்புத் திருமணம், விதவை மறுமணம் முதலான மறுமலர்ச்சிப் பணிகளில் அக்கறை காட்டிச் சமுதாயத்தில் பெண்களைத் தலை நிமிர வைத்தது சுயமரியாதை இயக்கம். தேவதாசி முறையை ஒழிக்கவும் மணவிலக்குப் பெறுவதிலும் தருவதிலும் உள்ள இழிவை நீக்கவும் இந்த இயக்கம் தயங்காமல் முன்வந்து ஆதரவுக் குரல் கொடுத்தது.

உரிமை பேச, உரிமை பெற, கல்வி பெற, பெற்றோர் சொத்தில் ஆண் பிள்ளைகளைப் போலவே பங்கு பெற - இப்படி யெல்லாம் பெண்களை எழுச்சிபெற வைத்தது சுயமரியாதை இயக்கம்.

வகுப்புவாரி உரிமை, பெண்ணுரிமை, தீண்டாமை ஒழிப்பு, வருணாசிரம தரும ஒழிப்பு, சமதர்மப் பிரச்சாரம் ஆகியவை சுயமரியாதை இயக்கத்தின் நாடி நரம்புகளாக ஆகிவிட்டன.

அறிஞர் ஆனைமுத்து அவர்கள் வகுப்புவாரி உரிமையின் வரலாற்றை ஆராய்ந்து பல இன்றியமையாதச் செய்திகளைத் தெரிவிக்கிறார். "1920 இல் நடைபெற்ற சென்னை மாகாணச் சட்டமன்றத் தேர்தலில் தென்னிந்தியர் நல உரிமைச் சங்கம் போட்டியிட்டுப் பெரும்பான்மை இடங்களைக் கைப்பற்றியது. 17-12-1920-இல் முதலாவது அமைச்சரவையை சென்னை மாகாணத்தில் அக் கட்சி அமைத்தது. திராவிடக் கட்சியின் ஆட்சித் தொடக்கம் என்று இதைக் குறிப்பிடுவது பொருந்தும்." என்று அவர் கருதுகிறார். இந்த அமைச்சரவை பார்ப்பனரல்லாதாரின் நலனில் அக்கறை கொண்டது என்றும் முதன்முதலாக மாகாண அரசாங்க

வேலைகளில் எல்லா வகுப்பினர்க்கும் இட ஒதுக்கீடு தந்து 1921 இல் வகுப்புவாரி ஆணையை அந்த அமைச்சரவைப் பிறப்பித்தது என்றும் அதற்குப் பிறகும் தொடர்ந்து 15-2-1922, 6-2-1924 ஆகிய நாள்களிலும் வகுப்புரிமை ஆணைகள் வெளியிடப் பட்டன என்றும் அப்படி இருந்தும் 1927 வரை எந்த ஆணையும் நடைமுறைக்கு வரவில்லை என்றும் தெரிவிக்கிறார். (காண்க, 'பெரியாரியல்', தொகுதி 2, பக்கம். 129-131).

டாக்டர் சுப்பராயன் அவர்கள் தலைமையில் அமைந்த அமைச்சரவையில் பத்திரப் பதிவுத் துறை அமைச்சராக இருந்த திருவாளர் எஸ். முத்தைய முதலியார்தான் வகுப்புவாரி உரிமை ஆணையை முதன் முதலாக 1927 நவம்பரில் நடைமுறைப் படுத்தினார். ஒவ்வொரு வகுப்பினருக்கும் அரசு அலுவல்களிலும், அதிகாரங்களிலும் அவரவர்க்கு உரிய பங்கு கிடைக்க வேண்டும். அப்படிக் கிடைக்காமல் இருப்பதேகூட அந்த மக்களின் சுயமரியாதைக்கு இழுக்குதான். இதனால்தான் சுயமரியாதை இயக்கம் தொடக்கத்திலிருந்தே வகுப்புவாரி உரிமையில் மிகவும் கருத்தாக இருந்திருக்கிறது. இந்த உரிமை மைய அரசு அலுவல்களிலும் பதவிகளிலும் பிற்பட்டோருக்கு வழங்கப் படாமல் இருந்தது என்பதும் ஜனதா தளக் கட்சித் தலைவர் விஸ்வநாத் ப்ரதாப் சிங் (வி.பி. சிங்) பிரதமராக இருந்தகாலத்தில்தான் 27 விழுக்காடு மட்டும் வழங்கப் பட்டது என்பதும் இந்த ஒதுக்கீட்டு ஆணை (13-8-1990) கிடைக்க எடுக்கப் பட்ட முயற்சிகளில் மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியும் அதன் பொதுச் செயலாளர் ஆனைமுத்து அவர்களும் 29-4-1978 முதல் தொடர்ந்து ஆற்றியுள்ள பங்கு பெரிது என்பதும் இங்கே நினைவுகூரத் தக்கதாம். வகுப்புவாரி உரிமையைப் பறிப்பதிலும் அபகரிப்பதிலும் மறைப்பதிலும் ஆதிக்க சக்திகள் எப்போதும் குறியாக இருந்திருக்கின்றன.

எளிய மக்களுக்கும் பெண்மக்களுக்கும் சம வாய்ப்பும் சம உரிமையும் சுயமரியாதையும் வாய்க்க வேண்டும் என்று சுயமரியாதை இயக்கம் எல்லாவகையிலும் தன்னை முன்னிறுத்திப் போராடி வந்திருக்கிறது. இத்தகைய பணிகளில் இந்த இயக்கம் இந்தியாவுக்கே முன்னோடி என்று சொன்னால் அது மிகையாகாது.

இசைக் கச்சேரிகளில் தமிழிசை புறக்கணிக்கப் பட்ட போது தமிழிசையின் சுயமரியாதையைக் காக்கத் தமிழிசை இயக்கம் தோன்றியது. இந்தச் சூழலில் பெரியார் என்ன பேசுகிறார் பாருங்கள்;

"நமக்குப் பாட்டு கேட்கக் கூடத் தெரியாது என்றும் நம் மொழியானது பாட்டு இசைக்கக் கூடப் பயன்படாது என்றும் சொன்னால் இந்த இழி மொழி நம் உயிரைப் போயல்லவா கவ்வுகிறதா யிருக்கிறது." (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம்.1274). தமிழிசையைப் பற்றி இப்படி ஆதரவுக் குரல் கொடுத்தப் பெரியார் "தமிழ் இந்த நாட்டு மக்களுக்குச் சகல துறைக்கும் முன்னேற்றமளிக்கக் கூடியதும் சுதந்திரத்தை அளிக்கக் கூடியதும் மானத்துடனும் பகுத்தறிவுடனும் வாழத் தக்க வாழ்வை அளிக்கக் கூடியதும்" ஆகும் என்று தெளிவாகக் கருத்துரைக்கிறார். (காண்க, எஸ்.விராஜதுரை, வ. கீதா ஆகியோரின் பெரியார்: சுயமரியாதை சமதர்மம், பக்கம். 655). சுயமரியாதை இயக்கம் தமிழிசை இயக்கத்தை வலுப்படுத்தியது. தமிழ் உணர்ச்சியை வளர்த்தெடுத்தது. வடமொழியின் ஆதிக்கப் பிடியில் சிக்கிவிடாமல் தமிழுக்குப் பாதுகாப்பு அளித்தது.

தமிழர்கள் வாழ்வில் இடம்பெறும் சடங்குகளில் வைதிகக் கோட்பாடுகளுக்கு இருந்த மேலாதிக்கத்தைச் சுயமரியாதை இயக்கம் மிகப் பெரிய அளவுக்கு ஒடுக்கியது; தமிழகமெங்கும் நிலவிய மூடநம்பிக்கைகளை மிகப் பெரிய அளவுக்கு நீக்கியது.

சுயமரியாதை இயக்கத்தின் செல்வாக்கினால் வடமொழி மேலாதிக்கத்திலிருந்து தமிழுக்கு விடுதலை கிடைத்தது. பாஷாபிமானமும் தேசாபிமானமும் விலகி நாட்டுப் பற்றுக்கும் மொழிப் பற்றுக்கும் வழி பிறந்தது. நமஸ்காரம் போய் வணக்கம் வந்தது. அக்ராசனர் போய்த் தலைவர் வந்தார். காரியதரிசி போய்ச் செயலாளர் வந்தார். கழிப்பறை வாயில்களில் கூட ஸ்த்ரீ, புருஷர் என்று அறிவிப்பு வைத்த வெட்கக் கேட்டைச் சொல்லவும் வேண்டுமா? மொழிவெறியர்கள் யார் என்பது இப்போது மூடர்களுக்குக் கூடச் சரியாக விளங்குமே! இப்படி ஏராளமாக எடுத்துச் சொல்லலாம். இந்தக் கொடுமைகளையெல்லாம் எதிர் கொண்டு

வெற்றிகொண்ட தமிழ் ஆங்கிலேயர் போன பின்பு ஆங்கிலத்தின் பேரால் கொடுமைகளை எதிர்கொள்ளுகிறது. மொழிசார்ந்த சுயமரியாதை இன்னும் நமக்குச் சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிட வேண்டும்.

மொழிவழிச் சுயமரியாதை உணர்ச்சி மேலோங்கப் பெரியார் தமிழைப் பற்றிச் சொல்லுகிறார்:

*"நம் நாட்டுச் சீதோஷ்ண நிலையைப் பொறுத்தும் கருத்துகளின் செழுமையைப் பொறுத்தும் நமக்குத் தமிழ்தான் உயர்ந்த மொழியாகும். வடநாட்டானுடைய ஆசாரங்கள், தர்மங்கள், ஆசாபாசங்கள் முற்றிலும் நமக்கு மாறுபட்டவை. அவற்றிற்கேற்ப அமைக்கப் பட்டுள்ள அவர்களது மொழியே அவர்களுக்கு உயர்வானதாகவும் நமது மொழி அவர்களுக்குத் தாழ்வானதாகவும் தோன்றுவது சகஜம். ஆனால் நாமும் அவர்கள் நம் மொழியை மட்டமாகக் கருதுகிறார்களே என்பதற்காக நம் மொழியை மட்டம் என்று கருதிவிடலாமா? அப்படிக் கருதி வடமொழியை ஆதரிக்கப் புகுந்துதானே நாம் பல மூடநம்பிக்கைகளுக்கும் பல இழிவுகளுக்கும் ஆட்பட்டுத் தவிக்கிறோம். வடமொழியில் நமக்குப் பெயர் சூத்திரன். நாம் ஏன் சூத்திரர்கள் என்று இன்று கேட்க ஆரம்பித்திருக்கிறோம். இதற்கு நம் தமிழ் மொழியிலிருந்து ஒரே ஒரு ஆதாரமாவது காட்டட்டுமே! ஒன்றுகூட இல்லையே! வடமொழியை எடுத்துக் கொள்ளுங்கள், எவ்வளவு ஆதாரங்கள்! கடவுள் வாக்குகளே அதற்கு ஆதாரமாக வந்து விடுமே! தற்போது தமிழில் வந்து புகுந்து கொண்ட வடமொழி வார்த்தைகளை எடுத்து விட்டால் நம் குறைகள் தொல்லைகள் எவ்வளவு நீங்கும் என்பதும் தொடர்பை ஏற்றுக் கொண்டால் எவ்வளவு இழிநிலைக்கு ஆளாக வேண்டி யிருக்கிறது என்பதும் புரிகிறதல்லவா?" (காண்க, ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொ. 2, பக்கம். 970).*

மொழிசார்ந்த சுயமரியாதை உணர்ச்சிதான் 'நம் மொழியை மட்டம் என்று கருதிவிடலாமா' என்று கேட்க வைக்கிறது. இன்னொரு நேரத்தில் வேறொரு சூழலில் பெரியார் *'தமிழும் ஒரு காலத்தில் உயர்ந்த மொழியாகத்தான் இருந்தது'* (ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொ. 2, பக்கம். 971) என்று சொல்லுகிறார். இன்று அது வடமொழிக் கலப்பால் இடது

கை போல் பிற்படுத்தப் பட்டு விட்டது என்றும் அவர் ஒரு புதுமையான செயல்சார் விளக்கம் தருகிறார்.

திருக்குறளைப் பாராட்டி இது திராவிடர்களுக்கு உரிய சிறந்த ஒழுகலாற்று நூல் என்று போற்றிய பெரியார் 1948இல் சென்னையில் திருக்குறளுக்குச் சிறப்பாக மாநாடு ஒன்றை நடத்துகிறார். பக்தர்களுக்குப் பகவத்கீதை போலவும் கிறித்தவர்களுக்கு பைபிள் போலவும் சுயமரியாதை இயக்கத்தவர்க்குத் திருக்குறள் அமைகிறது.

சாதி இழிவை நீக்க முடியாமல் இன்றைய அரசு அமைப்புச் சட்டம் வருணப் பகுப்புக்குப் பாதுகாப்பு அளிக்கிறது என்றும் தீண்டாமை ஒழிப்பு முழுமை பெறாமல் நிற்பதற்கும் அந்த அரசு அமைப்புச் சட்டமே காரணமாகிறது என்றும் பெரியார் உணருகிறார். அதனால்தான் சட்ட எரிப்புக் கிளர்ச்சியை அறிவித்தார். மனித சமத்துவத்துக்கு இடையூறாக உள்ள சட்டப் பகுதியை 26-11-1957இல் எரித்து விட்டுத் தொண்டர்கள் பத்தாயிரம் பேர் கைது செய்யப்பட்டனர்; மூவாயிரம் பேர் சிறைப்பட்டனர்.

ஆசி என்பதற்குப் பதிலாக வாழ்த்து என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்று பெரியார் தூண்டுகிறார். தமிழர்களின் பொங்கல் விழாவை உழவர் திருநாள், தமிழர் திருநாள் என்று பெயர் கொடுத்துச் சிறப்பாகக் கொண்டாடச் சொல்லுகிறார். (காண்க, எஸ்.வி. ராஜதுரை, வ. கீதா ஆகியோரின் பெரியார்; சுயமரியாதை சமதர்மம், பக்கம், 561). சுயமரியாதை இயக்கம் தீபாவளிச் செல்வாக்கைக் குறைத்தது. இந்த இயக்கம் சார்ந்த இதழ்கள் பொங்கலின் போது சிறப்பாக நானூறு ஐந்நூறு பக்கங்களில் மலர்களை வெளியிட்டு விழாவைக் கொண்டாடின.

சுயமரியாதை இயக்கம் செங்கற்பட்டிலும் (1929) ஈரோட்டிலும் (1930) விருதுநகரிலும் (1931) சிறப்பாக மாநாடு கூட்டி நிறைவேற்றிய தீர்மானங்கள் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை.

ஈ.வெ. ராமசாமி நாயக்கர் என்ற பெயர் பெரியார் என்று மாறியதைப் பற்றித் திருச்சி ஆனைமுத்து அவர்கள் தரும் குறிப்பு இங்கே பதிவு செய்யத் தக்கது:

*"13-12-1927 குடி அரசு இதழ் வரையில் ஆசிரியர் ஈ.வெ. இராமசாமி என்றே குறிப்பிடப் பட்டது. குடி அரசு 25-12-1927 இதழ் தொடங்கி நாயக்கர் என்ற சாதிப் பட்டத்தை அவரே நீக்கி விட்டார். அந்த இடத்தில் பெரியார் என்ற சொல்லைச் சேர்ப்பது மரியாதை தருவது எனக் கருதி 1928 இல் முதன்முதலில் ஈ.வெ. ராமசாமிப் பெரியார் என எழுதியவர் நாகர் கோவில் வழக்குரைஞர் பி. சிதம்பரம் பிள்ளை ஆவார். 1938 நவம்பர் 12,13 இல் சென்னையில் நடைபெற்ற தமிழ் நாட்டுப் பெண்கள் மாநாடு பெண் விடுதலைக்கு ஈ.வெ.ரா. ஆற்றியுள்ள தொண்டைப் போற்றுந் தன்மையில் 'பெரியார்' என்ற சிறப்புப் பெயராலேயே அவரைக் குறிக்கவேண்டும் எனத் தீர்மானம் நிறைவேற்றியது. அது முதற் கொண்டு 'பெரியார்' என்றால் அது ஈ.வெ. ராமசாமி அவர்களை மட்டுமே குறிப்பதாயிற்று."*

இந்த விளக்கம் சுயமரியாதை இயக்கத்தின் மீது அக்கறை கொண்ட எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டிய விளக்கம்.

30-6-1968 இல் தத்தனூரில் தோழர் இராமசாமி திருமணத்தின்போது சுயமரியாதை உணர்ச்சியின் உந்துதலால் பெரியார் முன்னிலையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றினைத் தொடர்பு கருதி அப்படியே இங்கே பதிவு செய்ய விரும்புகிறேன்.

தமிழ்மறவர் பொன்னம்பலனாரின் மகளார் சகோதரியார் எழிலரசிக்கும் தோழர் இராசமாணிக்கத்திற்கும் 30-6-1968 இல் செந்துறை-செயங்கொண்டம் சாலையில் உள்ள மருவத்தூரில் சுயமரியாதைத் திருமணம் நடந்தது. பெரியார் மகிழ்ச்சியோடு மருவத்தூருக்கு வந்து அந்தத் திருமணத்தை நடத்தி வைத்தார். அதே நாளில் அரியலூர்-உடையார் பாளையம் சாலையில் உள்ள தத்தனூரில் தோழர் இராமசாமிக்கும் சகோதரியார் கமலத்திற்கும் பெரியார் தலைமையில் சுயமரியாதைத் திருமணம் நடந்தது. இந்தத் திருமணத்தில் மணமக்களை வாழ்த்திப் பேச வேண்டியவர்களில் நானும் ஒருவன். மருவத்தூரில் திருமணத்தை நடத்திவைத்துவிட்டு உடனே பெரியார் தத்தனூருக்குப் புறப்பட்டு விட்டார். சாலை வசதிகள் சரியாக அமையாத காலம். நேராக வர முடியாது; சுற்றித்தான் வர வேண்டும். நேராக வந்தால் பத்து மைல்; சுற்றி வந்தால் இருபது மைல். நான் நேராக நண்பர்களோடு மிதிவண்டியில் வந்தேன். பெரியார் அவருடைய உதவியாளர்களோடு காரில் சுற்றுப்

பாதையில் வந்தார். அவர் எனக்கு முன்பே வந்து விட்டார். 'பொற்கோ வந்தவுடன் சொல்லுங்கள். அவரைப் பேசச் சொல்லுவேன். அவர் பேசிய பிறகு நான் தொடர்ந்து பேசுவேன்,' என்று சொல்லிவிட்டு அவர்பேசத் தொடங்கிவிட்டாராம்.

நான் அங்கே போய்ச் சேர்ந்த வுடனே தோழர்கள் என்னை மேடைக்கு அழைக்கிறார்கள். நான் அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் பெரியார் பேச்சைக் கேட்டுக் கொண்டு சற்றுத் தொலைவில் நிற்கிறேன். சில நிமிடங்களில் பெரியார் தமது பேச்சை நடுவில் நிறுத்திக் கொண்டு, 'தோழர் பொற்கோவை மேடைக்கு அழைக்கிறேன்,' என்று ஒலிபெருக்கியில் இரண்டு மூன்று முறை குரல் கொடுக்கிறார். நான் உடனே விரைந்து மேடைக்குப் போகிறேன். நான் அவருக்கு அருகில் சென்ற உடனே, 'இப்போது டாக்டர் பொற்கோ பேசுவார். அவர் பேசி முடித்த உடனே நான் தொடர்ந்து பேசுவேன்.' என்று ஒலிபெருக்கியில் சொல்லிவிட்டுக், கையைக் காட்டி, 'நீங்கள் பேசுங்கள்,' என்று என்னிடம் சொல்லுகிறார். என் பேச்சின் சாரமான பகுதியை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்.

"அய்யா அவர்கள் நாள்தோறும் பரப்பிவரும் கருத்துகள் இந்தச் சமுதாயத்துக்கு இன்று மிகவும் தேவையானவை. சுயமரியாதை, பகுத்தறிவு, பொதுவுடைமை ஆகியவை இன்று நமக்குத் தேவையானவை என்பதால்தான் இவற்றை ஏற்றுக் கொள்ளுகிறோமே தவிர இவை சங்கத் தமிழகத்தில் இருந்தன என்பதற்காக அல்ல. இவை அப்போது இருந்தனவா இல்லையா என்பதே ஒரு தனி ஆராய்ச்சி.

"சங்கத் தமிழகத்திலும் மூடநம்பிக்கை இருந்தது. இன்று நாம் பேசுகிற முற்போக்குச் சிந்தனைகள் எல்லாம் பழந்தமிழகத்தில் இருந்திருக்க வேண்டும் என்று கருதுவதே சரியான கருத்தாகத் தோன்றவில்லையே! நான் தமிழ் படித்தவன் என்ற முறையில் உரிமையோடு இதைப் பேசுகிறேன். அய்யாவின் கருத்துகளில் பல ஆண்டுகளாக மிகுந்த ஈடுபாடு கொண்டவன் என்ற முறையில் உரிமையோடு இன்னொன்றையும் பேச விரும்புகிறேன். நான் தமிழ் படித்தவன் என்பதாலேயே தமிழுக்கென்று முன்பே போடப்பட்டுள்ள குறுவட்டத்துக்குள் என்னை நெருக்கி

நிறுத்தித் தவறான முன்முடிவுகளோடு என்னை யாரும் பார்க்கக் கூடாது.

"நான் ஆங்கில மொழிவரலாற்றையும் ஆங்கில இலக்கணங்களையும் ஆங்கில இலக்கியங்களையும் படித்திருக்கிறேன். இந்திய மொழிகளில் புதுமைப் பொலிவோடு விளங்கும் ஒருசில மொழிகளில் ஒன்றாகிய வங்காள மொழியைப் படித்திருக்கிறேன். மூட நம்பிக்கைகள், பேய் பிசாசுகள், தேவர்கள் அசுரர்கள், மந்திர மாயங்கள் - இவையெல்லாம் ஆங்கில இலக்கியங்களில் இல்லையா? இன்னும் தெளிவாகச் சுட்டிச் சொல்ல வேண்டுமானால், ஷேக்ஸ்பியரிலும் மில்டனிலும் மூட நம்பிக்கைகள் இல்லையா? அவற்றில் பேய் பிசாசுகளோ மந்திரங்களோ இல்லையா? இவற்றைப் பற்றி யெல்லாம் பேசாத இந்திய மொழிகள் ஏதாவது உண்டா? உண்மைநிலை இப்படி இருக்கும் போது தமிழிலக்கியங்களை மட்டும் ஏன் தாழ்த்திப் பேச வேண்டும்? இவற்றை நாம் பின்பற்ற வேண்டாம், இவற்றுக்குத் துதி பாட வேண்டாம். இழித்தும் பழித்தும் பேசுகிறோமே, ஏன்?

"இந்த இலக்கியங்களையெல்லாம் பாடத் திட்டத்தில் வைத்திருக்கிறார்கள். பாடம் நடத்த வேண்டி யிருக்கிறது. ஆங்கில இலக்கியங்களைப் போலத்தான் தமிழ் இலக்கியங்களையும் பாடத்தில் வைத்திருக்கிறார்கள். ஷேக்ஸ்பியர், மில்டனைப் போலத்தான் பாடத் திட்டத்தில் கம்பராமாயணமும் பெரிய புராணமும் இடம்பெற்றன. பாடத்திட்டத்தில் உள்ள பாடங்களை ஆசிரியர் நடத்தத்தானே வேண்டியிருக்கிறது? தமிழாசிரியர்களும் தமிழறிஞர்களும் முற்போக்குக்கு முட்டுக் கட்டைகளாக இருப்பது போல அய்யா பேசுவது அவர்களுக்கு மகிழ்ச்சியாகவா இருக்கும்? துன்பமாகத்தான் இருக்கிறது. உண்மையாக ஊன்றிக் கவனித்தால், படித்தவர் கூட்டத்திலேயே அய்யா கருத்துகளை அதிகம் எடுத்துப் பேசுவது தமிழாசிரியர்களும் தமிழறிஞர்களும் தமிழ்க் கவிஞர்களுந்தான் என்பது யாருக்கும் நன்றாக விளங்கும். அய்யா இவர்கள் மீது ஏன் கோபப்பட வேண்டும்?"

என்னுடைய பேச்சில் வெளிப்பட்டு நிற்பவை இரண்டு வினாக்கள்.

1 தமிழிலக்கியங்களைத் தனிமைப் படுத்தி ஏன் தாழ்த்திப் பேச வேண்டும்?

2 அய்யாவின் கருத்துகளை முன் நின்று பரப்புகிற தமிழ்ப் புலவர்களையும் தமிழறிஞர்களையும் ஏன் குறைபேசிக் கோபிக்க வேண்டும்?

இந்த இரண்டு வினாக்களுக்கும் வியப்புக்குரிய வகையில் விடை சொல்லி என் உள்ளத்தில் பெரியார் முன்னிலும் மிக உயர்ந்த இடத்தில் அமர்ந்து கொண்டார்.

என் பேச்சு முடிந்த உடனே பெரியார் பேசத் தொடங்கினார். கூட்டம் அச்சத்தோடும் கவலையோடும் கவனித்துக் கொண்டிருந்தது. அவர் பேச்சின் சாரம் வருமாறு:

'தோழர் பொற்கோ பேசியது முழுக்க முழுக்க யதார்த்தம். அவர் பேசியதை நான் வரவேற்கிறேன்.

'ஷேக்ஸ்பியர், மில்டன் முதலான இலக்கியங்களிலும் மூடநம்பிக்கை இருக்கிறது; பேய் பிசாசுகள் இருக்கின்றன. உண்மைதான். அந்த நூல்களை அவர்கள் புனிதப் படுத்தவில்லை.

பாத்திரங்களைக் கடவுளாக்கி வணங்கவில்லை. ஆராய்ச்சி செய்யாதே என்று தடுக்க வில்லை. ஆராய்ச்சி செய்பவனுக்குத் தொல்லை கொடுக்கவில்லை.

'இங்கே நிலைமை அப்படி இல்லையே. இங்கே உள்ள இதிகாச புராணங்களுக்கும் மற்ற இலக்கியங்களுக்கும் நல்ல ஆராய்ச்சி நூல்கள், திறனாய்வு நூல்கள் வரவேண்டும். அப்படிப் பட்ட ஆராய்ச்சி நூல்களை யார் வேண்டுமானாலும் எழுதிக் கொடுக்கலாம். அவற்றை ஆராய்ந்து பார்த்து வெளியிடத் தக்கவற்றைப் பரிந்துரை செய்ய நான் ஒரு குழுவை நியமிக்கிறேன். அந்தக் குழுவில் தமிழ்மறவர் வை பொன்னம்பலனார், திருச்சி வே ஆனைமுத்து, பொற்கோ ஆகிய மூன்று பேரும் இருப்பார்கள். அவர்கள் பரிந்துரையை அப்படியே ஏற்று நானே அந்த நூல்களை வெளியிடுகிறேன். நூலாசிரியருக்கு ஒரு சிறு சன்மானமும் கொடுக்கிறேன் இலக்கியங்களின் மீது உள்ள மூட பக்தி ஒழிய வேண்டாமா? ஆராய்ச்சிக்காரர்கள் எழுதுங்கள்.

'அடுத்ததாக, நான் தமிழாசிரியர்கள் மீதும் தமிழறிஞர்கள் மீதும் கோபப் படுகிறேன் என்று தோழர் வருத்தமாகக் குறிப்பிட்டார். உண்மைதான், நான் வேறு யாரிடம் கோபப் படுவது? படித்தவர்கள் வேறு யார் என் பக்கம் இருக்கிறார்கள்? எனக்கு வேறு நாதி இல்லையே. நான் இவர்களிடந்தான் கோபப் பட முடியும்.'

இந்தப் பேச்சில் நாங்கள் பெரியாரோடு அன்று கரைந்து போனோம். இந்த நிகழ்ச்சியை மனத்தில் கொண்டு அறிஞர் ஆனைமுத்து அவர்கள் பின்பு ஒரு சமயம் 'பொற்கோவை எனக்கு அறிமுகப் படுத்தியவர் பெரியார்' என்று பெருமிதத்தோடு குறிப்பிட்டார். பெரியார் இந்த நிகழ்ச்சியைச் சந்தித்த முறை என் மனத்தைக் கவர்ந்தது. இந்த அனுபவம் என் மனம் பக்குவப்பட ஏதோ ஒரு வகையில் உதவியிருக்கிறது. சுயமரியாதை உணர்ச்சியின் உந்துதலால் ஒரு இளைஞன் பெரியார் முன்னிலையில் தன் கருத்தை வெளிப்படுத்திய முறையும் அதைப் பெரியார் எதிர்கொண்டு தழுவிக் கொண்ட முறையும் இளைய சமுதாயத்துக்குத் தெரிய வேண்டும் என்பதற்காக இந்த நிகழ்ச்சியை இங்கே குறிப்பிட்டிருக்கிறேன்.

*"அனேக காரியங்களில் மற்றவர்களால் நாம் துன்பமும் இழிவும் அடையாமல், நம்மாலேயே நாம் இழிவுக்கும் கீழ்நிலைமைக்கும் ஆளாகி வருகின்றோம். நம்மை நாம் திருத்திக் கொள்ளாமல் நமக்குள் ஒரு பெரிய மன மாறுதல் ஏற்படாமல் நமது சமூகம் மாறுதல் அடைதல் என்பது ஒரு நாளும் முடியாத காரியமாகும்." (பட்டுக்கோட்டையில் 23-3-1936 இல் பெரியார் பேசியது. குடி அரசு 5-4-1936, பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம் 456).*

# 8. வரலாறு முன்னே செல்லும்; பின்னே போகாது

*படுக்கையிலிருந்து எழும்போது இன்று உங்கள் சுயமரியாதைக்கு என்ன செய்வது என்று யோசியுங்கள். ஒன்றும் செய்யாத நாளை வீணாய்ப் போனதாகவும் உங்கள் வாழ்நாளில் ஒன்று குறைந்ததாகவும் நினையுங்கள். (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம் 413.).*

சுயமரியாதை உணர்ச்சி என்பது ஒரு தீப்பிழம்பு. அது மேல் நோக்கி எரியுமே தவிரக் கீழ் நோக்கித் திரும்பாது. "பெரியோரை வியத்தலும் இலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே" என்ற தொடரின் உண்மை சுயமரியாதை வெளிச்சத்தில் நன்கு புலப்படுகிறது. கடந்த நூற்றாண்டு முழுதும் சுயமரியாதை வெளிச்சம் தமிழகமெங்கும் பரவி நம்மை நமக்குக் காட்டி நமது சுய அடையாளங்களை நமக்குத் தெரிய வைத்திருக்கிறது. சிதைந்து போன சுய அடையளங்களை மீட்டெடுத்துச் சீரமைக்க முயலுகிறோம். இருக்கிற சுய அடையாளங்களை இழந்து விடாமல் காப்பாற்றியாக வேண்டும்.

சுயமரியாதை உணர்ச்சி கட்சி கடந்து, சாதி சமயங் கடந்து, மொழி கடந்து பரவி நிற்கிறது. இந்த உணர்ச்சியை ஒடுக்காமல் நசுக்காமல் போற்றிக் காத்து முன் நிறுத்தித் தொடர்ந்து செயல்பட வேண்டும். சுயமரியாதைக்காரனுக்கு உலகமெங்கும் வேலை இருக்கிறது. கடைசி மூடநம்பிக்கைக் காரன் இருக்கும் வரை சுயமரியாதைக்காரனுக்கு வேலை இருக்கிறது.

மூடநம்பிக்கையால் பயன் பெற்றவர்கள், சமுதாய பொருளாதார ஏற்றத் தாழ்வுகளால் சுகம் கண்டவர்கள் சுயமரியாதை இயக்கத்தையும் அதன் தலைவர் பெரியாரையும் தூற்றினார்கள். அவதூறு பேசினார்கள். இழித்தும் பழித்தும் பேசி மகிழ்ந்தார்கள்.

"உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்"

என்ற குறளுக்கு இலக்கியமாக நின்று அவதூறுகளையும் தூற்றுதலையும் இழிப்புரைகளையும் பழிப்புரைகளையும் பொருட்படுத்தாமல் குறிக்கோளை நோக்கிப் பெரியார் தொடர்ந்து நடந்து கொண்டே இருந்தார். நெருப்பில் விழுந்த தூசுகளாய் அவதூறுகளும் தூற்றுதல்களும் இழிப்புரைகளும் பழிப்புரைகளும் பொசுங்கிச் சாம்பலாகிக் கொண்டிருக்கின்றன. சுடச்சுடரும் பொன்போல் பெரியார் மேலும் மேலும் துலங்கித் தோன்றுகிறார்.

பெரியாரைப் பற்றி வெளிப்பட்ட போற்றுதல்களையும் தூற்றுதல்களையும் பட்டியலிடுவது நமது நோக்கமல்ல. ஆனாலும் ஒரு சுயமரியாதைக்காரர், சுயமரியாதை இயக்கத்தின் தலைவர் போற்றுதலையும் தூற்றுதலையும் எப்படி எதிர்கொண்டார் என்று நாம் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும். அவர் எதிர்கொள்ள நேர்ந்தவை அவதூறு மட்டுமல்ல, தூற்றுதல் மட்டுமல்ல. எதிரிகளும் எதிரிகளின் கைக்கூலிகளும் கயவர்களும் அவர் மீது செருப்பு வீசினார்கள். கடலூரில் அவருக்குச் செருப்பு வீசப்பட்ட இடத்தில் பின்னாளில் சிலை வைக்கப் பட்டது. மதுரையில் 1946 இல் கருஞ்சட்டைப் படை மாநாடு நடந்த போது மாநாட்டுப் பந்தலுக்குத் தீ வைக்கப் பட்டது. இப்படியெல்லாம் எதிரிகள் இழைத்த அவமானங்களையும் பாதகங்களையும் அவர் எதிர்கொள்ள நேர்ந்தது. எந்த நேரத்திலும் அவர் வன்முறையைத் தூண்டியதில்லை. கலவரத்துக்கு வழி விட்டதில்லை. பெரியார் மறைந்தபோது இந்து மிஷன் அமைப்பின் ஸ்தாபகரான து.க. ஜகந்நாதாச்சாரியார் வெளியிட்ட அறிக்கையின் ஒரு பகுதியை இங்கே அப்படியே படிக்கிறேன், கேளுங்கள்;

"அவருடைய கொள்கைகளை நான் தீவிரமாகக் கண்டித்து எனது பத்திரிகையில் எழுதி வந்திருப்பவன். நான் அவரிடம் காட்டிவந்த மதிப்பைப் போலவே அவரும் என்னை அதேவகையில் மதித்து வந்தவர். அவர் உள்ளத்திலிருந்த மனிதாபிமான உணர்ச்சியை நான் என்றும் பாராட்டி வந்திருப்பவன். அராஜகத்தைக் கையாண்டதில்லை என்பது அவருடைய தலைமையின் சிகரமான

செயலாகும். அவருடைய தளராத உழைப்பிற்கும் தைரியத்திற்கும் அவரைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அவரைப் போன்று உண்மையான பொது ஜனத் தொண்டரை இனி நாட்டில் காணுவது அரிது. (நவமணி, 24-12-1973, காவிரி நாடன் வழங்கியுள்ள 'தந்தை பெரியார்: இறுதி நாள்களும் இதழ்களும்' பக்கம். 308).

ஏதிலிகளாக வதைபட்ட திராவிடர்களுக்கு ஆதரவுக் குரல் கொடுத்துப் பாதுகாப்பு அரணாக நின்றது சுயமரியாதை இயக்கம். வதைபட்டவர்களுக்கும் அவமானப் படுத்தப் பட்டவர்களுக்கும் வதைபட்டு உயிர்விட்டவரின் குடும்பத்துக்கும் நேசக்கரம் நீட்ட அன்று வேறு நாதி இல்லை. பெரியாரும் அவருடைய சுயமரியாதை இயக்கமுந்தான் கதி. சான்றுக்கு ஒன்றிரண்டு செய்திகளை மட்டும் சொல்லுகிறேன்.

துரோபதையின் மேலாடையைக் களைந்த கதைப் பகுதியைப் பெரிதுபடுத்தி அமர்க்களப் படுத்தி ஆர்ப்பாட்டம் செய்துவரும் பக்தர்கள் கேரளப்பகுதியிலும் தமிழகத்தின் தென் கோடியிலும் எளிய வகுப்புப் பெண்மக்கள் ரவிக்கையோ மேலாடையோ அணியக்கூடாது என்று இழிவு படுத்தப் பட்ட போது ஓடிவந்து உதவி செய்ய வில்லையே! கண்டுகொள்ளவே இல்லையே! ஒரு வைகுண்டர் அய்யாதான் தோள்சீலைப் போராட்டம் நடத்தி அவர்கள் மானத்தைக் காப்பாற்றுகிறார். பெரியார்தான் வைக்கம் போராட்டம் நடத்தி வதை பட்டுக் கைதாகி அவர்களின் இழிவைத் துடைக்கிறார்.

பிரிவுபடாத திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள உடையார்பாளையம் பகுதியில் கரடிகுளம் என்ற சிற்றூரில் பிறந்த வேலாயுதம் தன்முயற்சியால் படித்து ஆசிரியராகி அந்தப் பகுதி மக்களுக்கு விழிப்பூட்டினார். படியுங்கள் என்று மனித சமத்துவ உணர்வோடு ஊரில் இருந்த சிறுவர்கள் எல்லோரையும் படிக்கத் தூண்டினார். திருக்குறளைச் சொல்லிக் கொடுத்துச் சிறுவர்களுக்கும் திருக்குறளை அறிமுகப் படுத்தினார். அவர் மருமமான முறையில் கொலை செய்யப்பட்டார். துடித்துப் போய் அந்தப் பகுதிக்கு வந்து பார்வையிட்டார் பெரியார். சிதம்பரத்தில் 25-9-1948 இல் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் பேசும் போது "எங்கள் கழக ஏழை ஆசிரியர் ஒருவர் பதைக்கப் பதைக்கப் பட்டப்பகலில் தூக்கிலிடப் பட்டாரே, எங்களைத் தவிர வேறு யாராவது

ஏன் இந்த அக்கிரமம் என்று கேட்டதுண்டா?" என்று பெரியார்தான் மனங்கொதித்துக் கேட்டார். (காண்க, பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம் 566).

1950களில் பழைய சென்னை மாநிலத்திலிருந்த கம்யூனிஸ்டு கட்சிக்காரரர்கள் சேலம் மத்திய சிறையில் அடைக்கப்பட்டிருந்தார்கள். 11-2-1950 இல் அங்கு நடந்த துப்பாக்கிச் சூட்டில் 22 பேர் இறந்து போனார்கள். நூற்றுக்கு மேற்பட்டோர் காயம் பட்டுத் துன்பப் பட்டார்கள். இந்தக் கொடுமையைக் கண்டித்து 15-2-1950 இல் விடுதலை ஒரு தலையங்கம் தீட்டியது. அவர்களுடைய துன்பத்தில் சுயமரியாதை இயக்கமும் பங்கு கொண்டு நேசக் கரம் நீட்டியது. 1950களில் கம்யூனிஸ்டு தோழர்கள் வேட்டையாடப் பட்டபோது சுயமரியாதை இயக்கத் தோழர்கள் அவர்களுக்கு ஒல்லும் வகையான் உதவிப் பாதுகாப்பளித்தார்கள்.

நமது நாட்டு மக்களில் ஒரு பகுதியினருக்குப் படிப்பதற்குத் தடை; சில பகுதிகளில் நடப்பதற்குத் தடை, உடை உடுத்தத் தடை; பக்தியோடு இறைவழிபாடு செய்யக்கூடக் கோயிலுக்குள் நுழைவதற்குத் தடை இப்படிப் பட்ட கேடான நிலை எதிர்ப்போ முகஞ்சுளிப்போ கூட இல்லாமல் இயல்பாக ஏற்றுகொள்ளப் பட்டிருந்தக் காலத்தில்தான் சுயமரியாதை இயக்கம் பிறந்தது. இந்த இயக்கம் பிறந்து 80 ஆண்டுகள் ஆகப்போகின்றன.

மக்கள்நேய நோக்கில் எல்லோருக்கும் சுயமரியாதை, மனித சமத்துவம், ஆண்பெண் சமத்துவம், சம உரிமையோடு கூடிய சம உடைமை, தீண்டாமை ஒழிப்பு, வருணபேத ஒழிப்பு, சாதி பேத ஒழிப்பு - இவற்றை அடைவதுதான் சுயமரியாதை இயக்கத்தின் தலையாய குறிக்கோள்.

கோயில் கருவறைக்குள் இன்னும் தீண்டாமை ஒழியவில்லை. மாநில அரசின் சட்டத்தால் கூட அந்தத் தீண்டாமையை இன்னும் ஒழிக்க முடிய வில்லை. தமிழ் இன்னும் கருவறைக்குள் நுழைய முடிய வில்லை. தமிழர் வாழ்வில் தமிழ் நாட்டில் தமிழ் தாராளமாக நுழைய முடியாமல் இன்னும் எத்துணையோ தடுப்புகள் இருக்கின்றன.

சுயமரியாதை இயக்கம் எத்துணையோ அரும்பணிகளை நிறைவேற்றியிருக்கிறது. இதற்கிடையே

இன்னொன்றையும் நாம் எச்சரிக்கையோடு நினைவில் கொள்ள வேண்டும். சுயமரியாதை இயக்கச் சாதனைகளில் ஆங்காங்கே சறுக்கல்கள் நடந்து கொண்டே இருக்கின்றன.

தமிழ்நாடெங்கும் பிள்ளைகளுக்குப் பெயர் வைப்பதில் ஒரு புதுமையும் எழுச்சியும் ஏற்பட்டிருந்தது. பெயர்கள் யாவும் தமிழுணர்ச்சி சார்ந்தனவாகவும் உலகளாவிய முற்போக்குச் சிந்தனை சார்ந்தனவாகவும் இருக்கும். இப்போது வடமொழி மேலாதிக்கச் சின்னங்களாகவும் வைதிக மேலாதிக்கப் படிக்கற்களாகவும் பெயர்கள் பெருகிவருகின்றன. இந்தப் போக்கு வேண்டுமென்றே ஏற்பட்டதா? மெத்தனத்தால் ஏற்பட்டதா? எப்படி இருந்தாலும் இந்தச் சறுக்கல்கள் பண்பாட்டு நோக்கில் உறுதியாகச் சீர்செய்யப்பட வேண்டியவை.

ஒருவரையொருவர் சந்திக்கும் போதும் விடை பெறும் போதும் அழகாக வணக்கம் சொல்லுகிற வழக்கம் கொஞ்சம் தளர்ந்து தடுமாறுகிறது-தடமும் மாறுகிறது. நன்றி என்று சொல்லுவதும் வருந்துகிறேன், பொறுத்துக் கொள்ளுங்கள், மன்னிக்கவும் முதலான சொற்களை இடந்தெரிந்து ஆளுவதும் பண்பாட்டு நோக்கில் பாராட்டத் தக்க மேன்மைகள். இவையெல்லாம் இப்போது மங்கிப் பொலிவிழந்து நிற்கின்றன. இந்தப் போக்கு பண்பாட்டுப் பின்னடைவுக்கு வழிவகுத்து விடும். விழிப்பாக இருந்து உள்ளதைப் பாதுகாக்க வேண்டும்.

சாதிக்குச் சாதி நீதி வேறுபடுமானால் அது நீதியாக இருக்க முடியாது என்பது பள்ளிப் பிள்ளைகள் கூடத் தெரிந்து சொல்லக் கூடிய ஒரு பொது உண்மை. இந்த உண்மையை மறுத்து நிற்பதுதான் மனு நீதி அல்லது மனுதர்மம். மனுதர்ம ஆதிக்கத்தின்மேல் உள்ள எரிச்சலையும் வெறுப்பையும் வெளிப்படுத்தத்தான் "வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள் உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி" என்றும் "சூத்திர னுக்கொரு நீதி - தண்டச் சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொரு நீதி சாத்திரம் சொல்லிடு மாயின் - அது சாத்திர மன்று சதியென்று கண்டோம்" என்றும் பாடினார்கள். உலகளாவிய பண்பாட்டை உருவாக்க வேண்டிய இந்தக் கால கட்டத்தில் எந்தப் போராட்டமும் இல்லாமல் ஓசைப் படாமல் வருணபேதக்

கொடுமையை ஒழித்துவிட வேண்டாமா? அந்தக் கொடுமையை அறவே ஒழித்து மக்கள்நேயம் சார்ந்த மனித சமத்துவத்துக்கு வழிவிட வேண்டும். “எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும் தம்முயிர்போல்” எண்ணி வாழ வேண்டும் என்று பாடி ஆன்மநேயக் கொள்கையை உருவாக்கி விளக்கி உலகுக்கு வழங்கிய வள்ளலார் பிறந்த மண்ணில் வருணபேதம் தலை காட்டலாமா? வருணபேதக் கொடுமை ஒழிக்கப் பட வேண்டும். அந்தக் கொடுமைக்கு ஆதரவாக உள்ள சாத்திரம், தோத்திரம், இதிகாசம், புராணம், சடங்கு, சம்பிரதாயம் முதலானவற்றுக்கும் நமது நடைமுறை வாழ்க்கைக்கும் உள்ள தொடர்பு அறுத்தெறியப் பட வேண்டும்.

‘சாதிமதம் சமயமெனும் சங்கடம்’ ஒழிய வேண்டும் என்றும் ‘சாத்திரச்சே றாடுகின்ற சஞ்சலம்’ ஒழிய வேண்டும் என்றும் பாடியவர் நாத்திகரல்லவே! அவர் ஒரு இறைநம்பிக்கை யாளரல்லவா? ஆன்மநேயக் கோட்பாட்டை உலகுக்கு வழங்கிய வள்ளலார் பிறந்த மண்ணில் மனித நேயத்துக்குக் கூடத் தடைகள் இருந்தால் அந்தத் தடைகளை உடைத்தெறிய வேண்டாமா? சுயமரியாதை இயக்கம் அந்தத் தடைகளைத்தான் உடைத்தெறியச் சொல்கிறது.

‘ஏழையென்றும் அடிமையென்றும்
எவருமில்லை ஜாதியில்
இழிவுகொண்ட மனிதரென்ப
திந்தியாவில் இல்லையே’

என்று நமது தேசியக் கவி கண்ட கனவை எப்போது நனவாக்கப் போகிறோம்? ‘தமிழனென்று சொல்லடா தலைநிமிர்ந்து நில்லடா’ என்று பாடிய அரசவைக் கவிஞர் சொன்னபடி தமிழன் தலைநிமிர்ந்து நிற்பது எப்போது? தமிழன் இழிபிறப்பாளனாகவே இருந்து கொண்டு தலை நிமிர்ந்து நிற்க முடியுமா? தமிழைத் தீண்டத் தகாத மொழியாகக் கருவறைக்கு வெளியேயும் கல்விக் கூடங்களுக்கு வெளியேயும் நிறுத்தி விட்டுத் தமிழன் தலைநிமிர்ந்து நிற்க முடியுமா? இப்படியெல்லாம் எண்ணிப் பார்க்கிற அளவுக்காவது நமக்கு இப்போது அறிவும் துணிவும் பிறந்திருக்கிறது. இது தமிழகத்தில் சுயமரியாதை இயக்கத்தால் விளைந்த விளைவு. பெருமிதம் மிக்க சுயமரியாதையோடு

துறைதோறும் துடிப்போடு பாடுபட்ட செந்தமிழ்ச் செம்மல்களால் நாம் இப்போது கண்விழித்திருக்கிறோம். இளைய தலைமுறை நாம் இப்போது எங்கே இருக்கிறோம் என்று புரிந்துகொண்டு செயல்பட வேண்டும். அதற்கேற்ற வழிமுறைகள் சுணக்கமின்றி உருவாக்கப்பட வேண்டும்.

இந்தத் தலைமுறையினர் சுயமரியாதை இயக்கத்தின் பணிகள் பற்றியும் அதன் பயன்கள் பற்றியும் இளைய தலைமுறையினர் மகிழ்ந்து கேட்கும் வண்ணம் நிரம்ப எடுத்துச் சொல்லவேண்டும். சுயமரியாதை இயக்கத் தலைவர்களைப் பற்றியும் அவர்களுடைய போராட்ட அணுகுமுறைகள் பற்றியும் தமிழ்ச் சமுதாயம் தொடர்ந்து தெரிந்து கொள்ள வேண்டும். சுயமரியாதை இயக்கத்தால் இங்கே ஒரு நல்ல வரலாற்றுத் திருப்பம் ஏற்பட்டிருக்கிறது என்பது விளக்கமாக எடுத்துப் பேசப்பட வேண்டும்.

ராஜாஜியும் பெரியாரும் முனைப்பாக ஒரே இயக்கத்தில் பணியாற்றியவர்கள். இனிய நண்பர்கள். பெரியார் சிறையில் இருந்தபோது ராஜாஜி என்ன எழுதுகிறார்; எப்படி எழுதுகிறார் என்று பாருங்கள்.

"ஸ்ரீமான் இ.வி. ராமசாமி நாயக்கர் சிறையில் நடத்தப்படும் விதம்

*ஸ்ரீமான் ஸி ராஜகோபாலாச்சாரியார் பின்வருமாறு எழுதுகிறார்.*

*இப்பொழுது திருவனந்தபுரம் சிறைச்சாலையில் இருக்கும் ஸத்யாக்ரஹக் கைதியான ஸ்ரீமான் ராமசுவாமி நாயக்கரை உணவு, இட வசதி முதலிய விஷயங்களில் சாமான்யக் கைதிகளைப்போல் நடத்துவதாக நம்பத் தகுந்த இடத்திலிருந்து எனக்குச் செய்தி கிடைத்திருக்கிறது. அவர் சிறை உடைகளை அணிகிறார். காலில் இரும்பு வளையம் போடப்பட்டிருக்கிறது. மற்ற ஸத்யாக்ரஹக் கைதிகளிடமிருந்து பிரித்துத் தொலைவில் ஒரு தனிஅறையில் அடைத்திருக்கிறார்கள். ஆயினும் ஸ்ரீமான் நாயக்கர் உற்சாகத்துடன் இருந்து வருகிறார் என்பதை நான் சொல்லத் தேவை யில்லை. அவருடன் நான் நெருங்கிப் பழகி யிருப்பதால் அவரை நன்கு அறிவேன். அவர் செல்வத்தையும் அந்தஸ்தையும் துறந்து, சங்கடங்களை ஏற்றுக் கொண்ட தீர புருஷர். அவருடைய தூய்மையைப் பரிசோதிப்பதற்காக இத்தகைய சோதனைகள் செய்வதற்கு அவர்*

*சந்தோஷப் படுகிறார். ... ... பிரிட்டிஷ் இந்தியாவில் நடத்தப் படும் தோரணைக்கு இது முற்றிலும் மாறுபட்டிருக்கிறது. இருந்தாலும் ஸ்ரீமான் நாயக்கர் விஷயத்தில் திருவாங்கூர் கவர்ன்மெண்டார் தவறான வழியில் இறங்கி விட்டதாகத் தோன்றுகிறது. ஸ்ரீமான் நாயக்கருடைய அந்தஸ்து தெரியாமல் செய்யலாம். ஆனால் அது ஒரு சமாதானமாக முடியாது. மனச்சாட்சிக்காகச் சிறை செல்வோர் எத்தகையின ராயினும் அவர்களைக் கண்ணியமாக நடத்த வேண்டும். அந்த ஜில்லாவை விட்டுப் போய்விடும்படி ஸ்ரீமான் நாயக்கருக்கு உத்தரவிட்டார்கள். ... ... சாந்தமாக அதை மீறி நடந்தார். இருந்த போதிலும் பிரஷ்ட (வெளியேற்ற) உத்தரவின் நோக்கம் சம்பந்தப் பட்டவரைப் பாதுகாப்பில் வைத்திருப்பதால் நிறைவேறி விடுகிறது. ஆனால் அவருக்குக் கடுங்காவல் தண்டனை விதிப்பதும், இரும்பு விலங்குகள் போடுவதும், சிறை உடைகளைக் கொடுப்பதும், மற்றவர்களுடன் சல்லாப மில்லாமல் செய்வதும் நியாய விரோதமாகும். திருவனந்தபுரம் சிறையில் இருக்கும் தீரரைத் தமிழ்நாடு பாராட்டுகிறது. (காண்க, திருச்சி வே. ஆனைமுத்துவின் 'பெரியாரியல்' 2, பக்கம், 64-65)*

சுயமரியாதைக்கு எதிராக உள்ள எல்லாத் தடைகளையும் உடைத்தெறியுங்கள். பகுத்தறிவுக்கு எதிராக உள்ள எல்லாத் தடைகளையும் உடைத்தெறியுங்கள். சுயமரியாதை நமது பிறப்புரிமை. சுயமரியாதை இயக்க நடவடிக்கைகளில் மோசடி இல்லை, ஆக்கிரமிப்பு இல்லை, அபகரிப்பு இல்லை, பயங்கர வாதம் இல்லை, பழிவாங்கும் மனப்பான்மை இல்லை. சுயமரியாதைக்காரர்கள் அச்சுறுத்துவதுமில்லை, ஆசை காட்டுவதும் இல்லை. அவர்கள் பெரியோரை வியப்பது மில்லை, சிறியோரை இகழ்வதுமில்லை.

சுயமரியாதை இயக்கத் தலைவர் பெரியார் இந்த இயக்கத்தை அறிவு விடுதலை இயக்கம் என்கிறார். அவர் சொல்வதைக் கவனியுங்கள்.

*"சுயமரியாதை இயக்கமானது அரசியல்களின் பேரால் நமது நாட்டில் உள்ள பல கட்சிகளைப் போலல்லாமல், அன்னியர்களிட மிருந்து யாதொரு விதமான சிறு விஷயத்தையும் எதிர்பாராமல், மக்களின் அறிவை விளக்கி, அவர்களின் மனப்பான்மையை மாற்றுவதன் மூலமே உண்மையான விடுதலையையும் சமத்துவத்தையும் நன்மதிப்பையும் உண்டாக்கக் கூடியதான ஓர் இயக்கமாகும்.*

*"இவ்வியக்கத்தின் முக்கிய கொள்கை யெல்லாம் கட்டுப்பட்டு அடைக்கப் பட்டிருக்கும் அறிவுக்கு விடுதலையை உண்டாக்குவதே ஆகும். ஆதலால் சுயமரியாதை இயக்கம் என்பதை அறிவு விடுதலை இயக்கம் என்றே சொல்லலாம்." (குடி அரசு, 25-8-29 பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம், 481-482, காண்க, திருச்சி வே. ஆனைமுத்துவின் 'பெரியாரியல்' தொகுதி 1, பக்கம், 152-153).*

அரசியல் விடுதலை, நாட்டு விடுதலை, ஆன்மீக விடுதலை என்று வேறு வேறு விடுதலைகளைப் பற்றிக் கேட்டிருக்கிறோம். இவர் அறிவு விடுதலையைப் பற்றிப் பேசுகிறார். அறிவும் சிந்தனையும் அப்போது முடம் பட்டுக் கிடந்திருக்கிறது. முடக்கப்பட்டுக் கிடந்திருக்கிறது. சுயமரியாதை இயக்கந்தான் அறிவுக்கும் சிந்தனைக்கும் விடுதலை தேடித் தந்திருக்கிறது. அதனால்தான் சுய மரியாதை இயக்கத்தையே அறிவு விடுதலை இயக்கம் என்றே சொல்லலாம் என்கிறார்.

# 9. மக்கள் நேயச் சுயமரியாதை

'யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
இன்னா தென்றலும் இலமே மின்னொடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம் ஆகலின் மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'

கணியன் பூங்குன்றனார்

இந்தப் பாடல் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுந்த பாடல். கணியன் பூங்குன்றனார் இயற்றியதாக நமக்குக் கிடைப்பது இந்த ஒரு பாடல்தான். இதில் உள்ள ஒவ்வொரு அடியும் நம் நெஞ்சைக் கவர்ந்து தன்வயமாக்குகிறது. சுயமரியாதைக்கே இது ஒரு வலுவான அடித்தளம்போல நிற்கிறது. 'நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம் மலையினும் மாணப் பெரிது' என்ற திருக்குறளுக்கு ஏதோ ஒரு வகையில் நெருக்கமான விளக்கம் போல இந்தப் புறப் பாடல் காட்சி அளிக்கிறது. மக்களுக்குச் சுயமரியாதையும் அறிவும் ஒழுக்கமும் அன்பும் அருளும் வாய்க்கப் பெற்றால் எல்லா இழிவுகளும் நீங்கிப் போய்விடும். சுயமரியாதை உணர்ச்சி இருந்தால்தான் அறிவு, ஒழுக்கம், அன்பு, அருள் ஆகிய இவற்றுக்கெல்லாம் வாழ்வு கிடைக்கும். சுயமரியாதை உணர்ச்சி இல்லையானால் மற்றவை யெல்லாம் இருந்தாலும் அவற்றின் இருப்பு துலங்காது.

நாம் இங்கே குறிப்பிடுகிற சுயமரியாதை மனிதன் ஒவ்வொருவனுக்கும் தேவையான சுயமரியாதை. எப்படியாவது

மக்களுக்குச் சுயமரியாதையை உண்டாக்கி விட வேண்டும் என்று பெரியார் முயலுகிறார். அப்படி அவர்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சி தோன்றிவிட்டால் இன்று சமுதாயத்தில் காணும் பல கேடுகள் தாமாகவே மறைந்து விடும் என்று பெரியார் நம்புகிறார்: சுயமரியாதை என்பது கட்சி பேத மற்றது என்கிறார். இன்று உள்ள கட்சிகள் மறைந்தால் கட்சிக்காரர்களுக்கு வேலை இருக்காது. ஆனால் கடைசி மூடநம்பிக்கைக் காரன் இருக்கும் வரை சுயமரியாதைக் காரனுக்கு வேலை இருக்கும் என்று பெரியார் அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார்.

சமுதாயத்தில் காணும் ஏற்றத் தாழ்வுகளையும் மானமற்ற தன்மையையும் கண்டு அதைப் பற்றி ஆழமாகச் சிந்தித்து ஆராய்ந்து பார்த்து, "உண்மையான சுயமரியாதை உணர்ச்சி மக்களுக்குத் தோன்றிவிட்டால் அதுவே அரசியலையும் தேசியத்தையும் மற்றும் மத இயலையும் தானாகவே சரிப்படுத்திக் கொள்ளும்" என்று பெரியார் நமக்கு உறுதிப்படுத்திச் சொல்லுகிறார். (காண்க, பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 478). இன்று நாம் அன்றாட வாழ்வில் காணும் பல சீர்கேடுகளுக்குக் கூடக் காரணம் சிறுமை கண்டு பொங்காமல் நம்முடைய எதிர்ப்புக் குறிப்பைக் கூடக் காட்டாமல் சாம்பிக் கிடப்பதுதான். சுயமரியாதை இல்லாதவனால் எதையும் சரியாக எதிர்கொள்ள முடியாது.

'குட்டக் குட்டக் குனிபவனும் முட்டாள்; குனியக் குனியக் குட்டுபவனும் முட்டாள்' என்ற பழமொழி நெய்யும் திரியுமாய் நின்று சுயமரியாதை விளக்கை ஒளிர வைக்கிறது. சுயமரியாதை வெளிச்சங்கள் தமிழ்ப்பண்பாட்டு வரலாற்றில் எல்லாக் காலங்களிலும் தென்பட்டிருக்கின்றன என்று முன்பே குறிப்பிட்டோம். அத்திப்பாக்கம் வெங்கடாசல நாயகரின் 'இந்து மத ஆசார ஆபாச தரிசினி' என்ற நூலின் இரண்டாம் பதிப்புக்குப் பெரியார் ஒரு மதிப்புரை எழுதி யிருக்கிறார். அந்த மதிப்புரையில் பின்வருமாறு எழுதுகிறார்.

இன்றைக்கு அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் சென்னையம்பதிக்கு அடுத்த அத்திப்பாக்கம் வெங்கடாசல நாயகர் என்னும் ஒரு பேரறிஞரால் செய்யுளாகச் செய்யப்பட்ட 'இந்துமத ஆசார ஆபாச தரிசனி' என்னும் இந்த அருமையான நூல் ஒன்று எனது நண்பர் தோழர் குரு இராமலிங்கம்

அவர்களது முயற்சியால் வெளியிட்ட பிரதி ஒன்று எனது மதிப்புரைக்காக அனுப்பப் பட்டதை நன்றியறிதலோடு பெற்றுப் பெரிதும் படித்துப் பார்த்தேன். அவை யாவும் இந்து மத ஆசாரம் பற்றி எனது வெகு நாளைய கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட நோக்கத்தை அணியாகக் கொண்டு துலங்குவனவாகக் காணப்படுகின்றன.

நான் பெரிதும் தொண்டாற்றிவரும் பகுத்தறிவை ஆதாரமாகக் கொண்ட சுயமரியாதை இயக்கத்தின் கருத்துகள் இன்றைக்கு 60, 70 ஆண்டுகளுக்கு முன்பாகவே மிகத் துணிவோடு தெளிவாக செய்யுள் உருவாய்ப் பாடப்பட்டிருப்பதைக் கூர்ந்து நோக்கினால் சுயமரியாதை இயக்கத்தின் கருத்துக்கள் புதியனவல்ல என்பதோடு, வெகு காலத்திற்கு முன்னதாகவே, அதாவது நான் பிறப்பதற்கு முன்னதாகவே, பல அறிஞர்களால் வெளியிடப்பட்ட பழங்கருத்துக்கள் என்பதற்கு ஓர் தக்க சான்றாகும். (காண்க, பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம் 1905).

அவர் குறிப்பிடுவது போலவே சுயமரியாதைக் கருத்துகள் பழையன என்றாலும் அதற்கு எதிரான வருணாசிரம தருமக் கோட்டைக்கும் பழங்காலத்திலேயே தமிழகத்தில் அடிக்கல் நாட்டப் பட்டு விட்டன என்பதும் உண்மை. ஆட்சிகள் மாறின; அரசுகள் மாறின. ஆனாலும் வைதிகச் செல்வாக்கும் வடமொழிச் செல்வாக்கும் வாய்ப்பு கிடைத்தபோதெல்லாம் கவனமாக வளர்க்கப் பட்டிருக்கின்றன.

மக்கள் நேயச் சுயமரியாதைக்கு நேர் எதிர்ப்பாக உள்ள வருணாசிரமக் கோட்டை இன்னும் தகர்க்கப்பட வில்லை. தீண்டாமை ஒழிப்பு இன்னும் முழுமையாக நிறைவேற வில்லை. மனித சமத்துவம், சம வாய்ப்பு, சம உடைமை, சம உரிமை இவற்றுக்கெல்லாம் அடித்தளமாக விளங்குவது மக்கள் நேயச் சுயமரியாதை.

சுயமரியாதைக் கொள்கைக்காகவே தந்தை பெரியார் ஒரு இயக்கத்தை உருவாக்கிய பிறகுதான் வருணாசிரமக் கோட்டையும் தீண்டாமைக் கோட்டையும் நிலைகுலைந்தது. அவருடைய மனித நேயமும் சுயமரியாதை உணர்ச்சியுந்தான் அவரைப் பொதுவாழ்வுக்குக் கொண்டுவந்தது. தொடக்க காலத்தில் அவருடைய உழைப்பையும் செல்வாக்கையும் தியாக மனப்பான்மையையும் நன்கு பயன்படுத்திக் கொண்டவர்கள்

அவர் கொள்கைக்குக் கைகொடுக்க வேண்டிய நேரத்திலெல்லாம் நழுவி நழுவிப் போய் ஒரு நேரத்தில் அவருடைய கோரிக்கையை அலட்சியப் படுத்தினார்கள். பெரியாரின் சுயமரியாதை உணர்ச்சி அப்போது விசுவரூபம் எடுத்தது. காங்கிரசு இயக்கத்தை விட்டே வெளியேறுகிறார். இவருடைய மக்கள் நேயச் சுயமரியாதை உணர்ச்சி தென்னிந்திய நல உரிமைச் சங்கத்துக்கும் நீதிக் கட்சிக்கும் வலிவூட்டித் துலங்கச் செய்தது. சுயமரியாதை உணர்ச்சி கட்சி கடந்து பரவுகிறது. சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை அப்படியே ஏற்றுக் கொண்டு அதற்குமேலும் வேலைத் திட்டங்களை வகுத்துக் கொண்டு திராவிடர்கழகம் பிறந்தது. 1926 முதல் சமுதாய மேம்பாட்டுக்காகப் பல்வேறு வகையில் தொடர்ந்து இயங்கி வருகிறது சுயமரியாதை இயக்கம். பல்வேறு எதிர்ப்புகளையும் இடையூறுகளையும் கடந்து இந்த இயக்கம் வரலாறு படைத்திருக்கிறது.

பெரியாரின் பணிகளால் தமிழகம் பயன் பெற்றிருக்கிறது. தமிழர்களின் இழிவு நீங்கி யிருக்கிறது. அரசியல், சமுதாய வாழ்வியல், கலை, இலக்கியம், பண்பாடு, கல்வி, ஆராய்ச்சி முதலான எல்லாத் துறைகளிலும் சுயமரியாதை வெளிச்சம் பரவியிருக்கிறது. சுயமரியாதைக் கொள்கையை ஏற்றுக் கொண்டவர்கள் இப்போது எல்லாக் கட்சிகளிலும் இருக்கிறார்கள். கட்சிகளுக்கு அப்பாலும் இருக்கிறார்கள்.

சுயமரியாதைக் காரர்களுக்கு இன்னும் நிரம்ப வேலைகள் இருக்கின்றன. எல்லா நிலைகளிலும் எல்லாத் துறைகளிலும் எல்லா இடங்களிலும் எல்லோருக்கும் சுயமரியாதை உணர்ச்சி ஏற்பட வேண்டும். சுயமரியாதைக் காரர்கள் ஒவ்வொருவருக்கும் இதில் பங்கு உண்டு.

சுயமரியாதை உணர்ச்சிதான் ஆதிக்க சக்தியை எதிர்த்து நிற்பதற்குத் தேவையான வலிமையைக் கொடுக்கும். சாதிச் செருக்கையும் பதவிச் செருக்கையும் செல்வச் செருக்கையும் அறிவுச் செருக்கையும் எதிர்த்து நின்று வெற்றி கொள்ளவும் தோழமை உணர்வோடு எளியோர்க்குக் கை கொடுத்து மக்கள் நேயத்தை வளர்த்துச் சமவாய்ப்பு, சம உரிமை ஆகியவற்றை உண்டாக்கவும் தேவையான வலிமையை நமக்கு எப்போதும் தப்பாமல் கொடுப்பது சுயமரியாதை உணர்ச்சிதான்.

ஒரு சுயமரியாதைக்காரன் புதிய சூழலை எப்படிச் சந்திக்க வேண்டும்? சிக்கல்களை எப்படித் தீர்க்க வேண்டும்? எதிர்ப்புகளை எப்படி எதிர்கொள்ள வேண்டும்? பெரிய முயற்சிகளில் எப்படிச் செயல்பட வேண்டும்? எதிரிகளின் அவதூறுகளையும் தூற்றுதல்களையும் எப்படிச் சந்திக்க வேண்டும்? சுயமரியாதை இயக்கத் தலைவர் பெரியாரின் வாழ்க்கை இவற்றுக்கெல்லாம் நமக்கு வழிகாட்டுகிறது.

சூழ்ச்சி, சதி, நயவஞ்சகம், ஏமாற்று இவற்றில் ஈடுபட்டுத் தடுமாறுவது சிறுபிள்ளைத்தனம். சுயமரியாதைக்காரன் சிறியன சிந்தியாதான். உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளும் இயல்பினான். நல்லது செய்ய முடியாவிட்டாலும் அல்லது செய்ய அஞ்சுவான். தன்னைப்போல் பிறரையும் கருதிப் போற்றுவான்.

சுயமரியாதை உணர்ச்சி மக்களிடம் பரவப் பரவ இன்று நாம் காணும் குற்றங்கள் குறையும். தன்னுடைய தகுதிக்கும் நிலைமைக்கும் கீழான காரியங்களில் மனிதன் ஈடுபடமாட்டான். மனிதன் கீழான நிலைக்கு இறங்காமல் காப்பதும் மேலான காரியங்களில் ஈடுபடுத்தி உயர்த்துவதும் அவனிடம் உள்ள சுயமரியாதை உணர்ச்சிதான். சுயமரியாதைக்காரன் பெரியோரை வியப்பதும் இல்லை; சிறியோரை இகழ்வதும் இல்லை. சாவு புதியது அல்ல என்பது அவனுக்குத் தெரியுமாதலால் அவன் சாவுக்குக் கூட அஞ்சுவதில்லை. மக்கள் நேயத்துக்கு எதிரானவற்றை எதிர்க்கவும் அழிக்கவும் அவன் தயங்கமாட்டான். சுயமரியாதைக்காரன் அம்பை நோக மாட்டான். எய்தவனைக் கண்டறிந்து அவனைத் தண்டிப்பான். ஆசை காட்டியோ அச்சுறுத்தியோ சுயமரியாதைக்காரனை வளைக்க முடியாது.

இன்றைய வாழ்க்கைச் சூழலில் தேவைகள் மிகுந்துவிட்டன. எல்லை மீறிய ஆசைகள் மனிதனை ஆட்டிப் படைக்கின்றன. ஆசை வெட்கமறியாது அல்லவா? தன்னையே விற்றுக்கொள்ளவும் தயங்காத மனிதர்கள் பெருகி வருகிறார்கள். சுயமரியாதை உணர்ச்சிதான் அவனைக் காப்பாற்ற முடியும்.

கிடைத்துள்ள சுதந்திரத்தை மனிதன் தவறாகப் புரிந்துகொண்டு விட்டான். ஆக்கிரமிக்கவும் அபகரிக்கவும் தயங்காதவனாக ஆகியிருக்கிறான். சமவாய்ப்பு, சம உரிமை என்ற தத்துவம் அவனுக்கு விளங்கினால்தான் ஆக்கிரமிப்பும் அபகரிப்பும் குறையும்.

அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி காலத்தையும் இடத்தையும் வென்று சுருக்கி வருகிறது. மனிதன் அளவுக்கு மீறிய அவசரத்துக்கு ஆளாகியிருக்கிறான். அதனால் பொறுமையை இழந்து கொண்டிருக்கிறான். அவனால் உள்ளபடியே வாழ்க்கையை அனுபவிக்க முடியவில்லை. உடனிருக்கும் மனிதர்களைத் தோழமை உணர்வோடு பார்க்கப் பழகினால்தான் அவனுக்கு வாழ்க்கை சுவைக்கும். அப்போதுதான் பொறுமை துளிர்க்கும்.

எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்று காதில் கேட்டுக் கேட்டுப் பழகி விட்டதால் தான் சொல்வதை மற்றவர் கேட்க வேண்டும்; மற்றவர் தனக்கு எதுவும் சொல்லத் தேவை இல்லை என்று நினைக்கிறான். சொல்லி அதிகாரம் செய்வது எப்போதும் நடக்காது. கேட்டும் அறிவு பெறவேண்டும் என்பதை அவனுக்குப் புரிய வைக்க வேண்டும்.

தப்பித்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையில் தவறு செய்கிறான். தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ள மீண்டும் மீண்டும் தவறு செய்து தப்பித்தவர்களிடம் ஓடிச் சரணடைகிறான். தப்ப முடியாத நிலை வரும்போது ஆதரவுக்கு ஆளில்லாமல் எல்லோருமாக அழிகிறார்கள். சுயமரியாதை உணர்ச்சி உள்ளவன் தப்பிவிடலாம் என்ற நம்பிக்கொண்டு தவறு செய்யமாட்டான்.

மக்கள் நேயச் சுயமரியாதைக்காரன் தோழமை உணர்ச்சியோடு கூட்டு முயற்சிகளை வரவேற்பான். பொறுப்புகளை நிமிர்ந்து நின்று ஏற்றுக் கொள்ளுவான். வளர்முக நாடுகளுக்குத் தோழமை உணர்ச்சியும் கூட்டு முயற்சியும் மிகவும் தேவை. உலகமயமாதல் கொள்கை வேகமாக உலகமெங்கும் பரவுகிற நிலையில் தோழமை கலந்த சுயமரியாதை உணர்ச்சிதான் நாட்டுநலனையும் வட்டார நலனையும் காப்பாற்றும். மனித உறவுகள் பன்முகப் பாங்கில் சிக்கல் வாய்ந்ததாக வளரும்போது ஈரநெஞ்சமும் மனித நேயமும் வளர்ந்தால்தான் அரிய பணிகள் கூட எளிதாய் நடக்கும். கேட்காதபோதே உள்நோக்கத்தோடு கொடுப்பது இனாம். இனாம் கொடுப்பதும் பெறுவதும் சமுதாய மேம்பாட்டு விரோதச் செயல். சுயமரியாதைக் கண்கொண்டு பார்த்தால்தான் இது விளங்கும்.

இந்திய நாட்டு மக்களிடையே நாம் இன்று காணும் ஒழுகலாறுகளில் நேரான ஒழுகலாறுகளும் உண்டு. யாரையும் திக்குமுக்காடவைக்கும் வகையில் அமைந்த சிக்கலான ஒழுகலாறுகளும் உண்டு. சிக்கலான ஒழுகலாறுகளைக் காட்டி மக்களை அச்சுறுத்துவதால் மக்களுக்கு என்ன பயன். ஒழுகலாறுகளைப் பற்றி எல்லோருக்கும் தெளிவு பிறக்கும் வகையில் சென்னை சுயமரியாதை இளைஞர் மன்றத் துவக்க விழாவுக்குத் தலைமை ஏற்று 17-11-1940 இல் சுயமரியாதை இளைஞர்களுக்குப் பெரியார் பின்வருமாறு சொல்லுகிறார்;

"ஒழுக்க விஷயங்களிலும், அதுபோலவே மக்களிடம் மக்கள் நடந்துகொள்ளுகிற ஒழுக்கத்தைப் பற்றித்தான் சுயமரியாதைக் காரருக்குக் கவலையே ஒழிய - எப்படிக் குடுமி வைப்பது, எப்படி வேட்டி கட்டுவது, எப்படிப் பொட்டு போடுவது, எப்படிப் பிரார்த்தனை செய்வது, யாரைத் தொடுவது, யார் வீட்டில் சாப்பிடுவது, எது சாப்பிடலாம், எது சாப்பிடக் கூடாது, எத்தனைக் கடவுள்கள், எந்தக் கடவுளைக் கும்பிடுவது, எதைக் கும்பிடக் கூடாது, எது வேதம், எது சாஸ்திரம் - என்பனவாதிகளில் சுயமரியாதைக்காரருக்குக் கவலை இல்லை. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், எந்த மனிதனும் அன்னியனுக்கு (அடுத்தவனுக்கு) உபகாரியாகவும் கடைசிப் பட்சம் அன்னியனுக்குத் துன்பம் கொடுக்காத வனாகவும் இருப்பதே பெரிய ஒழுக்கம் என்று சுயமரியாதை இயக்கத்தார் கருதி இருக்கிறார்கள்."

"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்" (புறம் 195)

என வரும் சங்கச் சான்றோர் கூற்றுக்கு இன்றைய சூழலுக்கு ஏற்றபடி விளக்கம் சொன்னது போல இருக்கிறது மேலே கண்ட சொற்பொழிவுப் பகுதி: எல்லோருக்கும் பொதுவான ஒழுக்கத்தை எல்லோரும் ஏற்கத் தக்க ஒழுக்கத்தை இளைஞர்களுக்குப் பரிந்துரைக்கிறது. பெரியாருக்கு உண்மையின் மீதும் ஒழுக்கத்தின் மீதும் மிகுந்த பற்றும் மதிப்பும் உண்டு. உண்மை ஒழுக்கம் ஆகியவற்றை வாழ்க்கையில் நேர்மையுடன் கடைப்பிடித்தால் 'அதற்கு ஒரு சக்தி உண்டு' என்றே பெரியார் தெளிவாகச் சொல்லுகிறார். (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பக்கம். 1084).

மக்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சி ஏற்பட்டு எங்குப் பார்த்தாலும் சுயமரியாதை அலை வீசும்பொழுது ஏமாற்று, வஞ்சகம், சூது, மோசடி, கையூட்டு முதலான எல்லா அற்பத் தனங்களும் மனித மனத்திலிருந்து உதிர்ந்து போய்விடும். தப்பித் தவறி மனிதன் அற்பத் தனமான காரியங்களைச் செய்ய நேர்ந்துவிட்டாலும் அவன் அதற்காக வெட்கப் படுவான், வருந்துவான். மக்கள் நேயச் சுயமரியாதை உணர்ச்சிதான் எதிர்கால உலகை வாழ வைக்க வேண்டும். அறிமுகமாகும் போது புன்முறுவலோடு கைகுலுக்கி விட்டுப் பழக்கமான பிறகு கால்களை அமுக்கிவிடச் செய்பவன் சுயமரியாதை அலை வீசும்போது பெரியமனிதனாக வரமுடியாது. மனிதக் கொடுமைகளுக் கெல்லாம் நல்ல மருந்து மக்கள் நேயச் சுயமரியாதைதான். மனிதனை மனிதனாக்கும் செயல்கள் போற்றிப் பாராட்டி ஊக்குவிக்கப்பட வேண்டும். மனிதனைக் கீழே இழுக்கும் அற்பச் செயல்கள் வெறுத்து ஒதுக்கப் பட வேண்டும். மக்கள் நேயச் சுய மரியாதைதான் இப்படிப்பட்ட சூழலை உருவாக்கி வாழ்வை இனிதாக்கும்; இந்த உலகை வாழத் தகுந்த இடமாக மாற்றும்.

இப்படியெல்லாம் சுயமரியாதையைப் பற்றி நாம் விரிவாக எண்ணிப் பார்த்ததனால் நம் மனம் திண்மையும் தெளிவும் பெறுகிறது. இதனால் எல்லா அற்புதங்களும் சுயமரியாதை உணர்ச்சியாலேயே நடந்துவிடும் என்ற எண்ணத்துக்கு நாம் இடந்தந்துவிடக் கூடாது. ஆனால் ஒன்றை மட்டும் மீண்டும் உறுதியாகச் சொல்லுவோம்; சுயமரியாதை உணர்ச்சி இல்லாமல் வெகு மக்களுக்கு எந்த நன்மையும் வராது. சுயமரியாதை உணர்ச்சிதான் ஒரு மனிதனிடமுள்ள மற்ற எல்லாத் திறமைகளையும் துலங்க வைக்கும்.

மக்கள் நேயச் சுயமரியாதை இன்று நமக்குத் தேவையான மாமருந்து. சுயமரியாதைக்காரர்களின் பணி தொடர வேண்டும். இளைய தலைமுறை இந்தச் சுயமரியாதைக் கொள்கையை எளிதில் புரிந்து கொள்ளலாம். மக்கள் நேயச் சுயமரியாதை வெளிச்சம் எல்லாத் திசைகளிலும் பரவட்டும்.

*"ஒரு மனிதன் சொல்லி, மனிதனாக வேண்டிய அவசியத்தில் மனிதன் இல்லை; தானாக மாறித்தான் ஆவான். நாம் வேகப் படுத்துகிறோம். அவ்வளவுதான்" (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், தொகுதி 1, ப-ம். 540)*

# விடைபெறுகிறேன். நன்றி

இந்தக் கடுமையான சொற்பொழிவைப் பொறுமையாக இருந்து கேட்டிருக்கிறீர்கள். சமுதாய வரலாற்று நோக்கிலும் பண்பாட்டு நோக்கிலும் சொல்ல வேண்டிய செய்திகளைச் சொல்லியிருக்கிறேன். எந்த வகையிலும் யாரையும் மனம் நோகச் செய்வது நமது நோக்கமல்ல; பக்குவமான முறையில் எல்லோருக்கும் சரியான புரிதலை ஏற்படுத்துவதே நமது நோக்கம். இந்த உணர்வோடுதான் செய்திகளை அளவாகவும் முறையாகவும் பேசியிருக்கிறோம்.

இந்த உரை உங்களுக்கு ஊக்கமும் உறுதியும் எழுச்சியும் அளித்திருந்தால் அது எனக்கு மிகவும் மகிழ்ச்சி. இந்த உரையில் எங்காவது ஏதாவது குறையோ உறுத்தலோ நெருடலோ இருந்தால் அருள்கூர்ந்து பொறுத்துக் கொள்ளுங்கள். இந்த உரையைப் பொறுமையோடு கேட்டு இந்த நிகழ்ச்சியைப் பெருமைப் படுத்திச் சிறப்பித்த உங்கள் எல்லோருக்கும் என் அன்பு நிறைந்த நன்றி.

இந்த அறக்கட்டளையை நிறுவிய பெருமக்களுக்கும் இங்கே இந்தச் சொற்பொழிவினை ஆற்றும் இனிய வாய்ப்பினை எனக்கு வழங்கிய நிறுவனத்திற்கும் அந்த வாய்ப்பினைச் சிறப்பாக நிறைவேற்றிய இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் இந்தப் பணி சிறப்பாக நிறைவு பெற இயக்குநரோடு உடனிருந்து உதவிய அன்பு நெஞ்சங்களுக்கும் எழுத்துரையை உருவாக்க எனக்குத் துணைநின்ற வாலாசா வல்லவன், முனைவர் பா. மதுகேசுவரன், பொறியாளர் திரு த. இராசசேகரன் ஆகியோர்க்கும் என் மனமார்ந்த அன்பு நன்றியைத் தெரிவித்துக் கொண்டு விடைபெறுகிறேன். நன்றி. வணக்கம்.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| ஏ.என். சிவராமனின் பத்திரிகை உலகம் | 30.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் - 3 தொகுதிகள் | 395.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல், தொழில்நுட்பம் - 2 தொகுதிகள் | 190.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி..பி. 1851-2000 | 180.00 |
| தமிழர் கண்ட தாவரவியல் | 40.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| திராவிட இயக்க இதழ்கள் தொகுதி 1 | 60.00 |
| சைவசித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை | 65.00 |
| பெரியபுராணம் - திருமுறைகளின் கவசம் | 55.00 |
| காஞ்சிபுரம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டுக்கு முன் | 65.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | 25.00 |
| தமிழ் உரைநடையும் கிறித்தவர் பங்களிப்பும் | 20.00 |
| திருக்குறளில பொதுநிலை உத்திகள் | 30.00 |
| தமிழிலக்கியத்தில் மனிதநேயம் | 115.00 |
| தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழில் பிறதுறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும் | 25.00 |
| வ.உ.சி. பன்முகப் பார்வை | 25.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |
| பாரதியின் சமுதாயச் சிந்தனைகள் | 25.00 |
| சமூகத்திலும் இலக்கியத்திலும் ஊனமுற்றோர் | 80.00 |
| தெ.பொ. மீனாட்சி சுந்தரனாரின் தமிழ்த்தொண்டும் மொழியியல் பங்களிப்பும் | 25.00 |
| சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள் | 45.00 |

---

| | |
|---|---|
| 553. மக்கள் நேயச் சுயமரியாதை | 30.00 |